விக்டர் வியுகோவின்

# ஆன்ஜெல்லோ

தமிழாக்கம்

கவிஞர் வாணிதாசன்

பதிப்பாசிரியர்

அரங்க. நலங்கிள்ளி

வாணிதாசன் பதிப்பகம்
சேலியமேடு அஞ்சல், பாகூர் (வழி)
புதுவை மாநிலம்-607 402

முதற்பதிப்பு : திசம்பர், 1989
(C) ஆசிரியர்க்கு

| | | |
|---|---|---|
| Title | : | Aanzellow |
| Language | : | Tamil |
| Author | : | Victor Hugo, Translated by Vanidasan |
| Subject | : | Drama |
| Edition | : | First Edition |

விலை ரூ. 12

கிடைக்குமிடங்கள் :

**வாணிதாசன் பதிப்பகம்**
சேலியமேடு அஞ்சல், பாகூர் (வழி)
புதுச்சேரி-607 402

**பாரி நிலையம்**
184, பிராட்வே
சென்னை-600 108

**ஐந்திணைப் பதிப்பகம்**
282, பாரதி சாலை, திருவல்லிக்கேணி
சென்னை-600 005

---

அச்சிட்டோர் :

ஸ்ரீ சோமதி அச்சகம்
41, சூரப்ப முதலி தெரு
திருவல்லிக்கேணி, சென்னை-5

# பதிப்புரை

கவிஞர் வாணிதாசனால் தமிழாக்கம் செய்யப்பட்ட விக்டர் வியுகோ (Victor Hugo)வின் ''ஆன்ழெல்லோ'' எனும் இந்நாடக நூல் பிரெஞ்சுப் பண்பாட்டைத் தமிழ் வழிப் புரிந்து கொள்ள உதவுகிறது.

இந்நாடகம் 1981-82ல் 'காதல்' எனும் மாத இதழில் சில மாதங்கள் தொடர்ந்து வெளிவந்தது. இந்நாடகத்தின் கையேட்டுப் படியைக் காதல் அலுவலகத்திலிருந்து பெற்றுத் தற்போது நூல் வடிவாக்கியுள்ளேன்.

வாணிதாசன் அவர்களைத் தமிழுலகம் கவிஞராக மட்டுமே அறிந்துள்ளது. வாணிதாசன் ஒரு நாடக ஆசிரியரும் ஆவார் என்பதை இந்நூல் தமிழுலகிற்கு உணர்த்தும் என நம்புகிறேன். கவிஞரின் மறைவுக்குப்பின் (1974) ''வாணிதாசன் கவிதைகள்—தொ. 2'' (1981), ''வாணிதாசன் கவிதைகள்—தொ. 3'' (1984) ஆகிய நூல்கள் வெளிவந்துள்ளன. தற்போது இந்நாடக நூல் வெளிவருகிறது. தமிழுலகம் என்றும் போல வாணிதாசனின் இந்நூலுக்கும் வரவேற்பும் ஆதரவும் நல்கும் என உறுதியாக நம்புகிறேன். இந்நூலாக்கத்திற்குத் தக்க ஆலோசனைகளை வழங்கிய பேராசிரியர் டாக்டர் பொற்கோ அவர்கட்கும் உடனிருந்து உதவிய நண்பர் திரு அரணமுறுவல் அவர்கட்கும் எனது நன்றிகள்.

புதுவை
23-12-1989

**அரங்க. நலங்கிள்ளி**

## உறுப்பினர்கள்

(விக்டர் வியுகோவின் 'ஆன்ழெல்லோ' எனும்
நூலின் தமிழாக்கம்)

| | | |
|---|---|---|
| தீஸ்ப் | — | நடனப்பெண் |
| ஆன்ழெல்லோ | — | பது நாட்டுச் சர்வாதிகாரி |
| கத்தேரினா | — | சர்வாதிகாரியின் மனைவி, ரொதோல்போவின் உயிர்க் காதலி, |
| ரொதோல்போ | — | கத்தேரினாவின் காதலன் |
| ஓமோதேய் | — | வேனீஸ் நாட்டு ஒற்றன் |
| ஆனாபெஸ்தோ | — | ரொதோல்போவின் தோழன் |
| ரெழினல்லா, தப்ன் | — | கத்தேரினாவின் தோழிகள் |

## களம்—1

முதல் நாள்

இரவில் நடக்கப்போகும் விழாவிற்காகத் தோட்டமெங்கும் விளக்கேற்றப் பட்டுள்ளது. தோட்டத்தின் வலப்புறம் விளக்குகளும், இசைகளும் நிறைந்த கோட்டை தோட்டக்கதவு. அங்கு விழாவிற்கு வந்தவர்கள் நடமாடுகின்றனர். கதவருகில் நீண்ட கல்லாலான இருக்கை (கல் பெஞ்ச்). இடப்புறம் மற்றொரு நீண்ட கல்லாலான இருக்கை. அதன் மேல் ஒரு மனிதன் தூங்கிக் கொண்டிருக்கிறான். தோட்டத்தினுள் மரங்களினிடையில் பது என்ற அந்நகரத்தின் தோற்றம் மெல்லிய நிழலுருவில் தோன்றுகிறது.

காட்சி : 1

*தீஸ்ப் : விலையேறப்பெற்ற ஆடம்பர உடையோடிருக்கிறாள்.*

*ஆன்ழெல்லோ மலிப்பியரி : பொன்னால்ஆன நக்ஷத்திரச் சின்னங்கள் பொலிய சிற்றரச உடையோடு காட்சியளிக்கிறான்.*

*ஓமாதேய் : நடுத்தர உடை, தலைமாட்டில் ஒரு கித்தாரோடு (இசைக்கருவி) நீண்ட இருக்கையில் துயில்கிறான்.*

*தீஸ்ப் : ஆம்—நீங்கள்தான் இங்குத்தலைவர் கோமானே! நீங்களே வேனீஸ் நகர முதல் நீதிபதி! சர்வாதிகாரி;*

நீங்கள் விரும்பினால் சாவையோ, வாழ்வையோ மக்களுக்கு அளிக்கமுடியும். விடுதலை அல்லது சிறை வாழ்வு உங்கள் கையில் தான் இருக்கிறது. எங்கும் உங்களைப் பார்ப்பவர்கள் வேனீஸ் குடியரசின் முகத்தையும் அதன் வலிமை மிகுந்த தோற்றத்தையும் பார்க்கின்றனர். தாங்கள் தெருவில் போகும்போது கோமானே—சன்னல்கள் அடைத்துக் கொள்கின்றன. வழிப்போக்கர்கள் தங்கள் கண்ணிற்குப் படாமல் மறைந்து விடுகின்றனர். வீடுகள்-வீட்டின் ஒவ்வொரு பகுதியும் நடுங்குகின்றன. இப்பதுமக்கள் தங்கள் முன் துருக்கி நாட்டானைக் கண்டு நடுங்குகின்ற கான்ஸ் டாட்டி நோபள் மக்களைப் போலல்லவோ நடுங்கு கிறார்கள். பாவம்! அவர்கள் அழகும் ஆண்மையான தோற்றமெல்லாம் எங்கோ ஒடுங்கி விடுகின்றது. ஆம்! அதில்சிறிதும்ஐயமில்லை! நான்பிரேசியாவிற்குச்சென் றிருக்கிறேன். அதுவும் இந்த வேனீஸ் குடியரசின் கீழ்ப்பட்டதுதான். இருந்தாலும் கூட இந்தப் பதுவை நடத்துவதுபோல பிரேசியாவை வேனீஸ் நடத்துவ தில்லை. பிரேசியா சற்றுத் தன்மானமுள்ள நாடு. அடிக்கடி எதிர்த்துக்கொள்கிறது. வேனீஸ் அதைத் தண்டிக்க முற்பட்டால் பிரேசியா சீறுகிறது. ஆனால் பாவம்—இந்தப்பது—அடங்கி ஒடுங்கிக் கிடக்கிறது. வெட்கக் கேடானதுதான்-என்ன செய்வது? மக்கள் அப் பேர்ப்பட்டவர்கள். தன்மானமற்றவர். போகட்டும். நீங்கள் இங்குள்ளோருக்கெல்லாம்தலைவர். எனக்கும் தலைவர் என்று கூட நினைத்திருக்கிறீர்கள். கோமானே! கோபித்துக் கொள்ளாதீர்கள். உண்மை தானே! அரசியலைப்பற்றியல்ல. உங்களைப் பற்றியே நான் கூறுகிறேன். நீங்கள் ஒருமாதிரி தனிப்பட்டவர், உங்களைப்பற்றி எனக்கு ஒன்றும் அதிகமாகத் தெரி யாது. என்மேல் உங்களுக்குக் கொள்ளை கொண்ட ஆசை. ஆனால் உங்கள் மனைவிமீது உங்களுக்குச் சந்தேகம். ஏன் அப்படித்தானே?

ஆன்மெழல் : அவள் என்பது மட்டும் என்ன? உன்மீது கூடத்தான் சந்தேகம்.

தீஸ்ப் : சந்தேகமா...என்மீதா....கடவுளே அதை நீங்கள் என்னிடம் கூறவேண்டாம். கூறக்கூட உங்களுக்கு உரிமை கிடையாது. ஏனென்றால் நான் உங்களுக்குச் சொந்தமானவளல்ல. இங்கு உங்களுக்கு ஆசைநாயகி யாக இருக்கிறேன். சர்வாதிகாரியின் சரசாங்கியாக இருக்கிறேன். அவ்வளவுதான்.

ஆன்மெழல் : இந்த விழா எவ்வளவு இன்பமாக இருக்கிறது பார்த்தாயா?

தீஸ்ப் : நான் ஓர் ஏழை நடனமாது! என்னைச் சட்ட சபை உறுப்பினர்களுக்கு இன்பமூட்ட விழாக்களிலே நடனமாட ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது. என் ஆடல் பாடல்களால் அவர்களுக்கு இன்பமூட்டுகிறேன். அதுவும் வரவர முடியவில்லை. போகட்டும். ஏன் உங்கள் முகம் ஏதோ ஒருமாதிரியாக இருக்கிறது? என் முகமூடியைவிட இருண்டிருக்கிறதே உங்கள் முகம். என்ன உங்களுக்கு? நான் எவ்வளவோ விளக்குகளை யெல்லாம் தூண்டி விட்டுப் பார்க்கிறேன், உங்கள் முகத்தில் படர்ந்த சோர்வு நீங்கவில்லை. உங்கள் நெற்றியிலும், கண்களிலும் துக்கச் சாயல் தோன்று கிறது. இசையோடு கூட்டி இன்பத்தை வாரி இறைக் கிறேன், உங்கள் முகத்தில் துன்பமே தோன்றுகிறது. என் இசைக்கும் கலைக்கும் உங்கள் மகிழ்ச்சியைக் காட்டி ஊக்கமளிக்காமல் இருக்கின்றீர்களே. கோமானே! ஏதோ-சற்று-சிரியுங்களேன்பார்ப்போம்.

ஆன்மெழல் : (சிரிப்பை வரவழைத்துக்கொண்டே) உன் னோடு இங்கு வந்திருக்கிறானே அந்த இளைஞன் அவன் உன் அண்ணன் என்றுதானே என்னிடம் கூறி னாய்?

தீஸ்ப் : ஆம். அதற்கென்ன இப்பொழுது?

ஆன்ழெல் : நீ இப்பொழுது அவனுடன் பேசிக்கொண்டிருந்தாயல்லவா? அவனோடு இருந்தானே மற்றொருவன் அவன் யார்?

தீஸ்ப் : அவனா—அவன் என் அண்ணனின் நண்பன். அனாபெஸ்தோ கலியோபா

ஆன்ழெல் : உன் சகோதரனின் பெயரென்ன?

தீஸ்ப் : ரொதொல்போ-கோமானே! ரொதொல்போ அவன் பெயர். இருபது தடவைக்கு மேல் இதையெல்லாம் பற்றி உங்களிடத்தில் விளக்கியாயிற்று. மீண்டும் மீண்டும் இதையே கேட்டுக் கொண்டிருக்கிறீர்கள். இதை விடச் சுவையானது என்னிடம் கேட்பதற்கோ, சொல்வதற்கோ வேறு எதுவும் இல்லையா? எப்பொழுதும் இதைப்பற்றித்தானா கேள்வி?

ஆன்ழெல் : தீஸ்ப்! கோபித்துக்கொள்ளாதே-இனிமேல் உன்னை எதுவும் கேட்கமாட்டேன். அடடா! நேற்று நீ ஆடிய ஆட்டமும், பாடிய பாட்டும் என்ன இனிமையாக இருந்தது தெரியுமா? இந்தஇத்தாலிநாடு முழுதும் உன்னைப் போற்றுகிறது; புகழ்கிறது. ஒவ்வொருவர் நாவிலும் உன் குரலின் இனிமையும், உன் நடனக் கலையின் உயர்வுமே நடமாடுகின்றன. தீஸ்ப்—இந்தப் பது நகரத்து மக்களைப்பற்றி நீ இவ்வளவு குறை கூறினாயே—அவர்கள் எல்லாம்—அந்தக் கூட்டம் முழுமையும் உன்னுடைய ஒவ்வொரு ஆட்டத்து இறுதியிலும் எப்படிக் கைதட்டினார்கள் தெரியுமா? அவர்கள் மகிழ்ச்சியைக் கூச்சலிட்டுக் காட்டிய போதெல்லாம் என் மனம் உடைந்தேவிட்டது. அவர்கள் கண்களுக்கெல்லாம் நீ இன்பக் காட்சியாய்த் தோன்றத்தோன்ற எனக்குப் பொறாமையாக இருக்கிறது நீ எவ்வளவு அழகாய் இருக்கிறாய் தெரியுமா? அந்தக் கண்களெல்லாம் உன்னையே மொய்த்துக் கொள்கின்றன. அத்தனை பேரும் உன் குரலிசையை

வாயைப் பிளந்து சந்தடி இன்றிக் கேட்கின்றனர். அவர்கள் கண்களுக்கு இனிய விருந்தாக இருக்க, இருக்க என்னைப் பொறாமை பிடுங்கித் தின்கிறது. ஐயம் வளர்கிறது. போகட்டும். இன்று மாலை கதவருகில் அந்த முகமூடி அணிந்த மனிதனோடு பேசிக் கொண்டிருந்தாயே, அந்த மனிதன் யார்?

தீஸ்ப் : ''தீஸ்ப் கோபித்துக் கொள்ளாதே இனிமேல் உன்னை எதுவும் கேட்க மாட்டேன்'' இப்படிச் சொல்லி இன்னும் சிறிது நேரம்கூட ஆகவில்லையே? நன்றாக இருக்கிறது ஐயா உங்கள் வாக்கு! அந்த மனிதன்—விர்ழிலியோதஸ்கா.

ஆன்மெழல் : என் படைத்தலைவனா?

தீஸ்ப் : உங்கள் ரகசியப் போலீஸ் தலைவன்—அவர் தானே வேனீஸ் குடியரசின் ஒற்றன்?

ஆன்மெழல் : அவனிடத்தில் உனக்கென்ன வேண்டியிருக்கிறது?

தீஸ்ப் : உங்களிடத்தில் அதைச் சொல்லவில்லை. சொன்னால் உங்களுக்கு வருத்தமுண்டாகும், ஐயமுண்டாகும். அல்லவா?

ஆன்மெழல் : தீஸ்ப்....

தீஸ்ப் : இதைக் கேளுங்கள். நான் உண்மையைச் சொல்கிறேன் நான் யார் என்பது உங்களுக்குத் தெரியுமா? மக்களுக்குச் சொந்தமான ஓர் ஏழைப்பெண் நான். நாடோடி நடிகை. இன்றைக்கு உங்களால் விரும்பப் பட்டு நாளைக்குக் கைவிடப்படும் பொருள். ஒரு விளையாட்டுப் பொம்மை நான் இவ்வளவு கீழ்மையாக இருந்தாலுங்கூட எனக்கொரு தாய் இருந்தாள். ஆம் தாய்—தாய் என்றால் என்ன என்று உங்களுக்குத் தெரியுமா? உங்களுக்குத் தாய் இருந்ததுண்டா?

போகட்டும். பிள்ளை என்றால் என்ன என்றுதான் உங்களுக்குத் தெரியுமா? ஏழை—உணவின்றி, உடையின்றி மெலிந்து உற்றார் உறவினரின்றி—உங்கள் அருகில்—நீங்கள் நடக்கும் போது உங்களோடே நடந்து, நிற்கும்போது உடன் நின்று,—உங்களைச் சுற்றி—உங்கள் அருகில்-அழும்போதெல்லாம் ஆறுதல் மொழி கூறி, சிறுநகை காட்டி நிற்கும்...ஒரு பெண்... இல்லை ஒரு பெண்ணல்ல—ஒரு தெய்வம்... உங்களையே உயிரெனப் பாதுகாத்து மழலை மொழி கேட்டு மகிழ்ந்து, தலைமுடி திருத்தி—உம் செவ்விதழிலே சிரிப்பை வரவழைத்துப் பழக்கி, அன்பை ஊட்டி அன்பை வளர்த்து—உம் உடலை அவள் மடியில்—உம் விரல்களை அவள் உள்ளங்கையில்—உம் உயிரை அவள் இதயத்தில் பொறுத்திச் சூடேற்றிய செம்பொருள்! குழவியாக இருக்கும்போது தன்பாலூட்டி வளர்ந்தபோது உணவும் உயிரையும் ஊட்டிய....அந்தத் தெய்வத்தைத் தான் உங்கள் உதடு 'என் தாய்! என் தாய்!' என்னும் அவளும் 'என் பிள்ளை!' என்பாள். அடடா! எவ்வளவு இனிமையான சொற்கள் இந்த இரண்டு சொற்களும்? எனக்கும் ஒரு தாய் இருந்தாள். அவள் ஓர் ஏழைப் பெண். அவள் கணவன் பிரேசியாவில் பொது இடங்களில் ஏதாவது பாட்டுப் பாடுவான். நான் அவளோடு செல்வேன். ஏதாவது காசுகள் கிடைக்கும். இப்படியே எங்கள் வாழ்க்கை நடந்து வந்தது. அவளே எனக்குப் பாடங் கற்றுக் கொடுத்தவள். நான் அன்று முதற் கொண்டு பாடிவருகிறேன். சிறிது ஆடக்கூட அவளே என்னைப் பழக்கினாள். அவள் அந்த கத்தா—மெலாத் என்ற சிலையின் கீழ் நின்றுகொண்டு பாடுவது வழக்கம். காக கிடைக்கும்,

ஒருநாள் அவள்பாடுகின்றபாட்டில் என்ன பாடுகிறோம் என்று அவளுக்கே புரியாத அந்தப் பாட்டில்

வேனீஸ் பிரபுக்களைத் தாக்குகின்ற அடிகள் ஒன்றிரண்டு இருந்ததாகக் குற்றம் சாட்டப்பட்டாள். அங்கு வந்த வேனீஸ் மந்திராலோசனை குழுத் தலைவன் மீண்டும் பாடச் சொல்லிப் பார்த்தான். தன்னோடு வந்த படைத்தலைவனை விளித்து என் தாயைத் தூக்கிலிட.க் கட்டளையிட்டான். அவள் என்ன செய்வாள் பாவம்! வாய் திறக்கவே இல்லை. திறந்துதான் என்ன பயன் வேனீஸ் ஆட்சியில்? அவள் என்னை இறுக அணைத்தாள். முத்தமிட்டாள். அவள் கண்களிலிருந்து நீர் தாரை தாரையாக வழிந் தோடியது. அவள் சாவிற்காக அழவில்லை. என்னைத் தனியே எப்படி இந்தக் கொடிய உலகத்தில் விட்டுச் செல்வதென்பதற்காகவே அழுதிருப்பாள். அவளிடத் திலே ஒரு பித்தளைச் சிலுவை இருந்தது. அதில் என் பெயரை ''தீஸ்ப்'' என்று தன் கத்தியின் முனையால் எழுதி வைத்திருந்தாள். அதை எடுத்துத் தன் மார்போடு அணைத்துக் கொண்டாள். தன் கழுத்திலே கட்டிக்கொண்டாள். அப்பொழுது எனக்கு வயது பதின்மூன்று. அழவோ, கூச்சலிடவோ என்னால் முடியவில்லை. ஆடாது அசையாது பயத்தால் வெலுத்துக் குன்றிப் பேசமுடியாத நிலையிலே ஏதோ கனவிலே பார்ப்பதைப்போல் என் தாயை அந்தப் போலீஸ்காரர்கள்—ஈவு இரக்கமற்றவர்கள் கட்டி இழுத்துக்கொண்டு போவதைப் பார்த்துக் கொண்டே இருந்தேன். அங்குக் கும்பல் கூடிவிட்டது. ஒருவ னாவது வாய் திறந்து இந்த அடாத செயலைப் பற்றிக் கேட்கப் போகிறான். அந்தக் குழந்தைக்கு இருந்த இரக்கங்கூட அங்குக் கூடியிருந்த மக்களுக்குக் கிடையாது. அவ்வளவு கோழைகள். உயிருக்குப் பயந்த உதவாக்கரைகள். தப்பித்தவறி வாய் திறந் தால் தங்கள் தலைகளும் உருளும் என்ற பயம். அந்தக் குழந்தை மந்திராலோசனைக் குழுத்தலைவன் கையைப் பிடித்துக் கொண்டு நின்றிருந்தது. ஆம் அது

அவன் மகள். நல்ல அழகிய உருவம். காண்போர் கண்களைப் பறிக்கும் கட்டழகு. தந்தையின் கால்களைப் பிடித்துக் கதறி அழுது கெஞ்சி, நீண்ட நேரம் வாதாடி—தந்தையின் கால்களைக் கண்ணீரால் நனைத்த பிறகே அந்தத் தலைவருக்குச் சற்று இரக்கம் பிறந்தது. அந்த அழகிய கண்களினின்று வழிந்தோடிய கண்ணீரே என் அன்னைக்கு உயிரளித்தது. கோமானே! என் தாய் கட்டவிழ்த்து விடப்பட்டாள். அந்த அழகிய சிறுமிக்கு என்ன கைம்மாறு என் தாயால் செய்ய இயலும். தன் கழுத்திலே இருந்த அந்தப் பித்தளைச் சிலுவையை அவிழ்த்து, ''அம்மா இதை வைத்துக்கொள்—இது உனக்கு நன்மை செய்யும்'' என்று அந்தச் சிலுவையை அந்தப் பெண்ணிடத்தில் கொடுத்தாள். வாயார அந்தப் பெண்ணை வாழ்த்தினாள். சில திங்களுக்குப் பிறகு என் தாய் இறந்துவிட்டாள். நான் பிறகு பணக்காரியானேன். எப்படி, எப்படி, பணக்காரி ஆனேன்?—அது வேறுகதை. என் தாயின் உயிரைக் காப்பாற்றிய அந்தக் கடவுளைத் திரும்பப் பார்க்க வேண்டுமென்று துடியாய்த்துடிக்குதென்னுள்ளம். யார் அறிவார்கள்? இப்பொழுது அவள் நல்ல அழகிய பெண்ணாக இருக்கவேண்டும். ஒருக்கால் என் உதவி அவளுக்குத் தேவைப்பட்டாலும் படலாம். நானும் அவளைத் தேடிக் கொண்டுதான் இருக்கிறேன். நான் எங்கெங்கு செல்கிறேனோ அங்கெல்லாம் அவளைத் தேடுகிறேன். பெண்களின் கூட்டத்தைக் கண்டால் என் கண்கள் என்னையும்அறியாமல் அந்த அழகுருவத்தைத் தேடும். இரகசிய போலீஸ்—துப்பறிவோர்—யாராரிடமோ இந்த நிகழ்ச்சியைச் சொல்லிச் சொல்லித் தேடச் செய்கிறேன். அவளை யார் கண்டு பிடித்துக் கொடுக்கிறார்களோ அவர்களுக்கு பத்தாயிரம் பொன் பரிசளிப்பேன் இன்று மாலை

அதைப்பற்றியே அந்தத் துப்பறிவோனிடம் பேசிக் கொண்டிருந்தேன். போதுமா விளக்கம்?

ஆன்ழெல் : பத்தாயிரம் பவுன்கள்!...ஊம் ... அந்தப் பெண் கிடைத்தால் அவளுக்கு என்ன கொடுப்பாய்?

தீஸ்ப் : அவள் விரும்பினால் என் உயிரையே கொடுப்பேன்?

ஆன்ழெல் : அது சரி—நீ-அவளை எப்படி எதைக் கொண்டு தெரிந்துகொள்வாய்?

தீஸ்ப் : என் தாய் அவளுக்குக் கொடுத்த சிலுவையைக் கொண்டு.

ஆன்ழெல் : அவள் அதை இழந்திருந்தால்.

தீஸ்ப் : இருக்காது. அதை அவள் ஒருபோதும் இழக்க முடியாது.

ஆன்ழெல் : (ஓமோதேயைப் பார்த்துக் கொண்டே) அங்கு யாரோ ஆள்தெரிகிறது. ஆள் இருக்கிறா னென்று உனக்குத் தெரியுமா? அதுயார் அது?

தீஸ்ப் : (சிரித்துக்கொண்டே) ஆம். யாரோ இருக்கிறான் என்று மட்டும் தெரியும். அவன் இன்னும் தூங்கிக் கொண்டே இருக்கிறான். நல்ல தூக்கம். அவனிடத் தில் சென்று உங்கள் பொறாமையையும் ஆத்திரத்தை யும் காட்டவேண்டாம். அவன் என் ஆள் ஓமோதேய் ஓமோதேய் என்ன அது? யாரது? ஓமோதேய். கோமானே! தீஸ்ப்—ஒருபெண்— அதைப்போல் அவன் ஒரு ஆண். ஓமோதேய் நன்றாக இசைக்கருவி மீட்டக்கூடியவன். என் நண்பர்களிலே ஒருவர் பொரிசுக் கடிதம் கொடுத்தனுப்பியிருக்கிறார். சந்தேகக்கோமானே—நான் வேண்டுமானால் அந்தக் கடிதத்தை உங்களுக்குக் காட்டுகிறேன். அவன் சோம்பேறி. வேலை கிடைக்கவில்லை என்று

என்னிடம் அனுப்பி இருக்கிறார். அது மட்டுல்ல. அவர் எனக்கு ஒரு பரிசுப்பொருளும் கடிதத்தோடு அனுப்பி இருக்கிறார்.

ஆன்ழெல் : என்ன! என்ன அது!

தீஸ்ப் : வேனீஸ் நகரத்துப் பொருள். ஒரு சிறிய வெண்சீஷாவும், மற்றொரு சிறிய கருஞ்சீஷாவும் கொண்ட ஒரு பெட்டி. அந்த சீஷாவில் உள்ளது மயக்கமருந்து. அதை உண்டவர்கள் பனிரெண்டு மணிநேரம் பிணம் போலக்கிடப்பார்கள். மற்றொன்று கொடிய நஞ்சு. மற்றபடி அந்த ஆள் ஓமோதேய் ஒரு முண்டம், சோம்பேறி, ஒரே இடத்தில் நிலைத்து நிற்காதவன். நீங்களும்தானே பார்க்கிறீர்கள். வந்து பதினைந்து நாள் ஆகிறது - சாப்பிடுவதும் தனக்கு விருப்பமான இடத்தில் எங்காவது படுத்து உறங்குவது மாக இருக்கிறானே ஒழிய, ஏதாவது சிறிதாவது சுறுசுறுப்போ கவலையோ அவனுக்கு இருக்கிறதா பார்த்தீர்களா? வேனீசுக்குப் போக நினைத்துக் கொண்டால் போவான். நினைத்துக்கொண்டால் திரும்பி வந்துவிடுவான். என் தாய்கூட இவனைப் போலத்தான் இருந்தாள். இங்கே விழா நடக்கிறது. அவன் தூங்கிக் கொண்டே இருக்கிறான். பார்த்தீர்களா?

ஆன்ழெல் : அவனைப்பற்றி நீ பொறுப்பேற்றுக் கொள்கிறாயா?

தீஸ்ப் : போங்கள் எப்பொழுதும் இந்த அச்சந்தான். விழா நாட்களில்கூடவா? இப்படி அஞ்சி, அஞ்சிச்சாவது? அதிலும் அவன் ஒரு கித்தார் இசைக்கும் ஏழை, முண்டம், தூங்குமூஞ்சி, அவனைக் கண்டா, இப்படி அலறுவது? எப்பொழுது பார்த்தா லும் அவனைப்பற்றி, இவனைப்பற்றி, அதைப்பற்றி,

இதைப்பற்றி கேள்விகேட்டுக் கொண்டே இருக்கிறீர்களே இது என்ன பொறாமையா? அல்லது பயமா?

ஆன்ஜெழல் : இரண்டுந்தான்.

தீஸ்ப் : பொறாமை! அதுசரி. நீங்கள் இரண்டு பெண்களைக் கவனிக்கவேண்டியவர்களாக இருக்கிறீர்கள். ஆனால் பயம்? உங்களைப் பார்த்தால்தான் மக்களுக்குப் பயமாக இருக்கிறது. பயமாம்! இதென்ன முரணாக இருக்கிறதே உங்கள் பதில்!

ஆன்ஜெழல் : பயப்படுவதற்கு முதல் காரணம் சொல்லுகிறேன் கேள். (அவள் அருகில் நெருங்கித் தாழ்ந்த குரலில்) கவனமாகக்கேள்—தீஸ்ப்—நீ சொல்வது என்னமோ உண்மைதான். நான், சர்வாதிகாரி, மன்னன்—கோமான் - என்னால் எதையும் செய்ய முடியும். யாவும் உண்மைதான். வேனிஸ் என்னை இந்தப் பது நகரத்திற்குச் சர்வாதிகாரியாக நியமித்திருக்கிறது. புலி நகத்தில் அகப்பட்ட செம்மறி ஆடுபோல, பது என்னிடம் இருக்கிறதென்பது என்னவோ உண்மைதான். ஆனால் நான் எவ்வளவுக்கெவ்வளவு சர்வாதிகாரியோ அவ்வளவுக்கவ்வளவு ஒன்றுமில்லாதவன். எனக்கு மேல் பயங்கரமான-கொடூரமான வேனிஸ் இருக்கிறது.

தீஸ்ப் : வேனிஸ் என்றால் என்ன என்று உனக்குத் தெரியுமா? நான் சொல்கிறேன் கேள்! வேனிஸில் உள்ள பதின்மர் குழு நாட்டின் உயிர்நாடி. வேனிஸ் அரசு—அதுவே அதன் கண்ணிலிருந்து நான் நான் என்பதென்ன இந்தப் பது முதலிய கீழ் அடங்கிய நாடுகள் தப்பமுடியாது. மெதுவாகப் பேசு. இங்குக் கூடப் பதின்மர்குழுவின் காதுகள் கேட்டுக்கொண்டும், கண்கள் பார்த்துக்கொண்டும் இருக்கும். நமக்கு அவர்களில் ஒருவரைகூடத் தெரியாது. ஆனால் அவர்களுக்கு நம்மை நன்றாய்த் தெரியும். அவர்கள்

எங்கும் காற்றைப்போல நிறைந்திருப்பார்கள். அவர்கள் உடை நக்ஷத்திரக்குறி இவை நமக்கு வெளிப்படையாகத் தெரியாது. தூக்குமேடைக்கு நாம் போகும்போதுதான் அவர்களைப் பார்க்கமுடியும். அவர்கள் கையில் என் தலை, உன் தலை கிளர்ச்சிக்காரர்களின் தலை யாவும் அடங்கி இருக்கின்றன. வேனீஸில் இருப்பவர்கள்கூட அவர்கள் முகத்தைப் பார்த்திருக்க மாட்டார்கள். ஒன்றும் தெரியாத ஊமைகள் போல அவர்கள் இருப்பார்கள். அவர்களிடம் அகப்பட்டால் உண்மையைக் கக்க வைத்து விடுவார்கள். உண்மை தெரிந்த பிறகு சாவுதான். அதுவும் மற்றவர்களுக்குத் தெரியாது மறைவாகக் கொல்லப்படும். ஒரு வார்த்தை பேசவோ மறுப்புக் கூறவோ—கெஞ்சவோ கூத்தாடவோ முடியாது. கொலையாளி யார்—குற்றவாளி யார் என்பது கொலையாளிக்கும், குற்றவாளிக்கும் கூடத்தெரியாது. முகமூடி இட்டே யாவும் நடைபெறும். ஒரு குடும்பத்தில் ஒருவன் குறைகிறான் என்றால் குளம், குட்டை, ஆறு, கிணறு இவைகளுக்குத்தான் தெரியுமே ஒழிய குடும்பத்திற்குத் தெரியாது. அவ்வளவு மறைவாக— வஞ்சகமாக உயிர் வாங்கப்படும். வேனீஸ் கலை விருந்து, இசை விருந்து, விழாக்கள் மலிவென்று பேசப்படுகிறதே ஒழிய, என்ன நடக்கிறதென்பது உனக்குத் தெரியாது. கலையில் கலந்திருக்கும் வாழ்க்கை உனக்கு இருப்பதால் வேனீஸ் கலைக்கு இருப்பிடம், இன்பமாகப் பொழுதுபோக்க ஏற்றச் சிறந்த நகரம் என்று நீ நினைக்கலாம். மற்றவர்களும் கூறலாம். ஆனால் அரசியலில் கலந்த எனக்கல்லவா அங்கு நாடோறும் என்ன நடக்கிறதென்பது தெரியும். அங்கு என்பதென்ன இங்குக் கூடத்தான். ஒவ்வொரு வீட்டிலும் கோட்டையிலும் ஒற்றர்கள் பாம்பைப்போல நுழைந்து யாவையும் தெரிந்து கொள்வார்கள். உன்னைச் சுற்றி யாரோ

வந்து போவதாய் நினைப்பாய். ஆனால் அவர்கள் உன்னிடத்திலிருந்து மனதிலிருந்துகூட அறியவேண்டியதை அறிந்தே கொள்வார்கள். ஒவ்வொரு நாள் இரவிலும் நான் அடிக்கடித் திடுக்கிட்டெழுந்து படுக்கையில் உட்காருவேன். அறைச்சுவர்களில் நடமாடும் சத்தம் கேட்கும். பார்த்தாயா தீஸ்ப். எந்த நிலையிலும் நான் வாழ்கிறேன். - நான் பதுவுக்குச் சர்வாதிகாரி—எனக்கு மேல் வேனீஸ் - நான் பதுவை அடக்கி ஆளவேண்டுமென்பது கட்டளை. அதுமட்டுமல்ல, கொடியவனாக இருக்க வேண்டுமென்றும் கட்டளை. என்னிடம் யாராக இருந்தாலும் சரி மன்னிப்புக் கேட்காதே— உயிர்ப்பிச்சைக் கேட்காதே. என் உயிரை வேண்டுமானாலும் உனக்காகக் கொடுப்பேன். ஆனால் வேனீசை மீறி நான் எதையும் செய்யமுடியாது. கொடுமை எவ்வளவு வேண்டுமானாலும் நான் செய்யலாம். மன்னிக்க எனக்கு உரிமையில்லை. நான் ஒவ்வொரு நொடியும் கண்காணிக்கப்பட்டு வருகிறேன். ஒரு பூட்டுச் செய்யச் சொல்லி நீ கருமானிடம் உத்திரவிடு. அந்தப் பூட்டு செய்து முடிவதற்குள் அதன் சாவி பதின்மர் குழுவில் இருக்கும். தீஸ்ப்—என்னை நேசிக்கும் நண்பன் - என் வேலைக்காரன், என்னைக் காதலிப்பதாகச் சொல்லும் பெண், யாவரும் என்னை ஒற்றாய்கிறார்கள்.

தீஸ்ப் : ஐயோ பாவம்! அப்படியா....!

ஆன்ஜெலல் : உன்னைப்பற்றிக் கூறுவதாக நினைக்காதே- நீ தான் என்னைக் காதலிப்பதாக இதுவரையில் கூறியதே கிடையாதே. மீண்டும் சொல்கிறேன். தீஸ்ப் என்னைப் பார்க்கின்ற ஒவ்வொரு கண்ணும் பதின்மர் குழுவின் ஒவ்வொரு கண்ணாகவே இருக்கும். கேட்கின்ற காதுகள் ஒவ்வொன்றும் பதின்மர் குழுவின் ஒவ்வொரு செவியாகவே இருக்கும். தொடுகின்ற

கை ஒவ்வொன்றும் அதுவே. தொட்டுத்தொட்டுப் பார்த்துக் குற்றமில்லாதது போல் பாவனை காட்டிக் கெட்டியாக இறுக்கிக் கொள்ளும். எத்தகைய சர்வாதிகாரி நான். எனக்கே நாளைக்கு நான் வாழ் வேனா என்ற உறுதி கிடையாது. என் அறையில் ஒற்றர்களின் தலைவன் தோன்றி ''என்னோடு நட'' என்றால், பேசாது, அவனைப் பின் தொடரவேண்டியதுதான். எங்கு, ஏன் என்பதே எனக்குப் புரியாது. சர்வாதிகாரி என்பது—கயிற்றிலே தொங்குவதைப் போன்றதுதான் கயிறு கழுத்தை இறுக்காதவரையில் நன்மை. நஞ்சை ஆய்கின்ற அறிஞனைப் போன்றது என் வாழ்க்கை. விழிப்பில்லையென்றால் ஆயும் அறிஞனையே நஞ்சு கொன்றுவிடுமல்லவா இப்பொழுதாவது தெரிகிறதா நான் ஏன் பயந்து நடுங்கிக் கொண்டிருக்கிறேனென்று.

தீஸ்ப் : ஆ - கடவுளே—மிகப்பயங்கரமான பதவிதான் உங்களுடைய பதவி!

ஆன்ழெல் : ஆம்—குடிகள் மற்ற தன் போன்ற குடிகளைக் கொடுமைப் படுத்துவதற்குரிய கருவி நான். அந்தக் கருவி மிகப் பயன்பட்டுப் பயன்பட்டு விரைவிலே தானே தேய்ந்து உடைந்து விடும், தீஸ்ப் நான் கொடியவன்—கொடுத்து வைக்காதவன். எனக்கு இந்த உலகத்தில் இன்பமான ஒன்று இருக்கிறதென்றால் அது நீதான். ஆனால் நீ என்னைக் காதலிக்கவில்லை என்பதை நான் அறிந்து கொண்டுதான் இருக்கிறேன். போகட்டும். வேறு யாரையாகிலும் காதலிக்காமலாவது இருக்கிறாயா?

தீஸ்ப் : இல்லை—வேறு யாரையும் இல்லை. வீணாக ஏன் மனதைக் குழப்பிக் கொள்கிறீர்கள்.

ஆன்ழெல் : ஊம்...ஏதோ இல்லை, இல்லை என்கிறாய்...

தீஸ்ப் : இன்னும் எப்படித்தான் உங்களுக்குச் சொல் வதோ தெரியவில்லையே!

ஆன்மெழல் : சரி. நீ என்னைக் காதலிக்காவிட்டால் போகிறது. நான் பொறுத்துக் கொள்கிறேன். ஆனால் நீ வேறு யாரையும் காதலிக்கக்கூடாது. காதலிப்பதாகத் தெரிந்ததோ...

தீஸ்ப் : உங்களுக்கு இதேதான் வேலை...

ஆன்மெழல் : தீஸ்ப். எப்பொழுதுதான் நீ என்னைக் காதலிப்பாய் சொல்லேன்?

தீஸ்ப் : இங்குள்ள மக்கள் உங்கள் மீது அன்பு காட்டும் போது.

ஆன்மெழல் : ஊம்... சரி இங்கேயே இரு, பதுவை விட்டு நீ போக நான் விரும்பவில்லை. தெரிகிறதா. நீ சென் றால் என் உயிரும் உன்னைத் தொடர்ந்து வந்துவிடும். அதோபார் நம்மை நோக்கி யாரோ வருகிறார்கள். நீண்ட நேரமாக நாம் பேசிக்கொண்டிருப்பதுவேனீசில் நம்மீது ஐயத்தை உண்டாக்கும். நான் வரட்டுமா. (சற்று நின்று ஓமோதேயைக் காட்டி) இவனைப் பற்றி நீதான் பதில் சொல்லியாக வேண்டும். நினைவிருக் கட்டும்.

தீஸ்ப் : யார். இந்தத் தூங்குமூஞ்சியைப் பற்றிதானே ஆகட்டும்.

ஆன்மெழல் : அதோ உன் அண்ணன் வருகிறான். அவ னோடு பேசிக்கொண்டிரு· (போகிறான்)

## காட்சி—2

தீஸ்ப்-ரொதோல்போ : கரிய ஆடை அணிந்திருக்கின்றனர். ஒமோதேய் : தூங்கிக் கொண்டிருக்கிறான்.

தீஸ்ப் : ரொதோல்போ! ரொதோல்போ! வா-வா. என் உயிரல்ல உன்னைக் காதலிக்கிறேன் வா! (ஆன்ழெல்லோ போன பக்கமாகத் திரும்பிப் பார்த்து) கொடியவன்! என் அண்ணனல்ல—என் காதலன்—என் உயிர்! ரொதோல்போ வா - வீரம் மிகுந்த போர் வீரனே வா. என் அழகிய ஆண் சிங்கமே வா. இப்படி என்னைப் பார். நீ எவ்வளவு அழகாய் இருக்கிறாய் தெரியுமா. நான் உன்னைக் காதலிக்கிறேன்,

ரொதோல் : தீஸ்ப்......

தீஸ்ப் : நீ எதற்காகப் பதவிக்கு வந்தாய். நாம் இக்கொடியவன் வலையிலல்லவா அகப்பட்டுக் கொண்டிருக்கிறோம். நாம் இப்பொழுது மீண்டு போக முடியாதே. உன்னை என் அண்ணன் என்றல்லவா சொல்லித்திரிகிறேன். அது ஒரு நல்ல சூட்சிதான். இன்றேல் நீ எங்கும் வரப்போக முடியாது. இந்த சர்வாதிகாரி உன் தீஸ்பின் மேலல்லவா நாட்டங் கொண்டிருக்கிறான். அவன் பிடியில் நாம் இருக்கிறோம். அவன் நம்மை விடுபவனாகத்தெரியவில்லை. அவன் உன்னை யார் என்று தெரிந்துகொண்டால்- அதை நினைக்கும் போதே என் உடல் நடுங்குகிறது. அவன் கிடக்கிறான். என்னிடத்தில் அவன், எதையும் அடைய முடியாது. நீ உறுதியாக இருக்கலாம். நான் உனக்குத்தான் சொந்தம். ரொதோல்போ! ரொதோல்போ! இப்படிப்பார் நீ வேறுவிதமாக நினைக்காதே!

ரொதோல் : நீ ஒரு சிறந்தபெண்-அழகியபெண்—பெருந்தன்மையானவள்.

தீஸ்ப் : ரொதோல்போ— நான் உன்மேல் எவ்வளவு பொறாமையாக இருக்கிறேன் தெரியுமா. ஆம்— உன்மேல் எனக்குப் பொறாமைதான்! ஆம்—அவனுங் கூட- அந்த சர்வாதிகாரி வேனீஸ் நாட்டான்-அவனும் பொறாமை கொண்டிருப்பதாகக் கூறுகிறான்— பொறாமை கொண்டவனாகக் கற்பனை செய்து கொண்டான். பொறாமை கொள்வதற்கு என்ன உரிமை இருக்கிறது அவனுக்கு, பொறாமையாம் பொறாமை! உண்மையில் பொறாமையாக இருந் தால்—மற்றவைகளைப் பற்றி நினைவு உண்டாகாது. பொறாமை ஒன்றே தலைவிரித்தாடும். பதின்மர் குழு—ஒற்றர் — வேனீஸ் — குடியரசு — குளம்குட்டை இவையெல்லாம் தோன்றாது. பொறாமை ஒன்றே முன் நிற்கும். பொறுத்துக்கொள்ளமாட்டேன். அது எனக்குத் துன்பம் தருகிறது. அவர்கள் உன்னிடம் பேசுவதற்கு என்ன உரிமை இருக்கிறது. மற்றொ ருத்தி—ஊகும் வேண்டாம்—வேண்டவே வேண்டாம். அவளைக் கொன்று விடுவேன். நீ ஒருவனே இந்த உலகத்தில் எனக்குற்ற செல்வம். வாழ்வு - மகிழ்ச்சி யாவற்றிலும் சிறந்த ஒன்று. உன்னையன்றி என் உள்ளம் வேறுயாரையும் தீண்டாது. என் இருண்ட வாழ்விற்கு ஒளி தரும் பரிதி நீ. என் விழியின் ஒளி நீ. மற்றவர்கள் பாழ்படுத்திய என் மனத்திற்கு உன் காதல் மகிழ்வூட்டும் மருந்து. உன்னிடத்தில் தனித்துப் பேசும் ஒவ்வொரு வினாடியும் எவ்வளவு இன்பம் அடைகிறேன் தெரியுமா? நீ எதற்காக இங்கு வந்தாய். இந்தக் கொடியவனிடையில் நாம் எப்படி வாழ்கி றோம் தெரியுமா? ரொதோல்ப்! என் காதலன்!... ஆம்... என் அண்ணன்! நான் உன்னிடம் பேசும் யாவையும் மறந்து விடுகிறேன்—மகிழ்ச்சி வெறி தலைக்கேறி விடுகிறது. நீயே பார், உனக்குத் தெரிய வில்லையா? என் வெறி நிலை, ரொதோல்பே

என்னைக் காதலிக்கிறாயா? சொல்—சொல் ஒரு வார்த்தை ஊம் என்று சொல்லேன்.

ரொதொல் : உன்னைக் காதலிக்காதவர்கள் இருக்க முடியுமா தீஸ்ப்?

தீஸ்ப் : சில நாட்களாக நீ ஏதோமாதிரி இருக்கிறாய். உன்முகம் கவலையில் தோய்ந்திருப்பதாகத் தோன்று கிறது. உண்மைதானே—ரொதோல்போ - எந்தத் துன்பம் உன்னைப் பிடுங்கித்தின்கிறது? சொல்— சொல்லேன்

ரொதோல் : இல்லை- எனக்கொன்றுமில்லை—தீஸ்ப்.

தீஸ்ப் : உனக்கெந்தக் கவலையுமில்லையே? உண்மை யைச் சொல்.

ரொதோல் : இல்லை—

தீஸ்ப் : அப்படியானால் என்மேல் பொறாமையும், சந்தேகமும் கொண்டிருக்கிறாயோ?

ரொதோல் : இல்லை.

தீஸ்ப் : எனக்கென்னவோ பயமாகவே இருக்கிறது ரொதோல்போ நீ என் அண்ணன் அல்ல என்பது இங்கு யாருக்காவது தெரியுமா?

ரொதோல் : வேறுயாருக்கும் தெரியாது. அனாபெஸ் தோவுக்கு மட்டும் தெரியும்?

தீஸ்ப் : யார்? உன் தோழனுக்கா? (அனாபெஸ்தோ வருகிறான்) இதோ அவனும் வருகிறான்—அவனோடு நீ சிறிதுநேரம் பேசிக்கொண்டிரு (சிரித்துக்கொண்டே) அனாபெஸ்தோ ஐயா- இவர் வேறு எந்தப் பெண்ணோடும் பேசாது கவனித்துக் கொள்ளுங்கள்.

அனாபெஸ் : (சிரித்துக்கொண்டே) "உங்களுக்கு" அந்தக் கவலை வேண்டாம். நான் கவனித்துக்கொள்கிறேன் (தீஸ்ப் போகிறாள்)



காட்சி—3

ரொதோல்போ—அனாபெஸ்தோ— ஓமோதேய் (தூங்கிக் கொண்டிருக்கிறான்)

அனாபெஸ்தோ— (தீஸ்ப் போவதைப்பார்த்துக் கொண்டே.) அடடா! என்ன அழகு! என்ன அழகு! நீதானப்பாகொடுத்து வைத்தவன். அவள் உன்னைத் தன் உயிராகவல்லவா காதலிக்கிறாள்.

ரொதோல் :அனாபெஸ்தோ உனக்கு உண்மைதெரியாது ஏதோ கொடுத்துவைத்தவன் என்றெல்லாம் என்னைப் புகழுகிறாய். என்னைவிட பாவி வேறுயாரும் இருக்க முடியாது. நான் அவளைக் காதலிக்கவில்லை.

அனாபெஸ் : என்ன! என்ன சொல்லுகிறாய்?

ரொதோல் : (ஓமோதேய் தூங்குவதைப் பார்த்துக் கொண்டே)

இது யார் இந்த மனிதன்?

அனாபெஸ் : அட அவனா... அந்த இசைமீட்டுவோன் ஓமோதேய்—அவனைத்தான் உனக்குத் தெரியுமே.

ரொதோல் : அந்த முண்டமா?

அனாபெஸ் : அப்படியானால் நீ தீஸ்பைக் காதலிக்க வில்லை! விளையாடுகிறாயா? உண்மைதானா?

ரொதோல் : நான்தான் சொன்னேனே! நான் அவளைக் காதலிக்கவில்லையென்று. மீண்டும், மீண்டும் கேட்கிறாயே. விடு— அந்தப் பேச்சையே விட்டுவிடு.

அனாபெஸ் : தீஸ்ப்— தங்கச்சிலை அவள்!

ரொதோல் : உண்மைதான். தங்கச்சிலை என்பதென்ன தாமரைப்பொய்கை! தன்னை மறந்து இசைக்கும் புள்ளிக்குயில்! மயில்-யாவும் பொறுத்தம்தான். ஆனால் என் மனம் அவளை நாடவில்லையே, நான் அதற்கு என்ன செய்வது?

(தீஸ்ப் சிரித்துக்கொண்டே ஓடி வருகிறாள். ''ரொதோல்போ சென்று விடாதே இதோ வருகிறேன் எனக்காக சிறிதுநேரம் காத்திரு'' என்று சொல்லி அவன் கன்னத்தைத் தட்டிவிட்டுச் செல்கிறாள்.)

அனாபெஸ் : (அவள் போவதைப் பார்த்துக்கொண்டே பாவம் தீஸ்ப்...கொடுத்துவைக்காதவள்.

ரொதோல் : என் வாழ்க்கை இரகசியமானது... ஆம் அதை வேறுயாரிடமும் சொல்லி என்ன பயன்?... என்னோடே மக்கட்டும்.

அனாபெஸ் : ரொதோல்போ நீ இன்றுமிகக் கவலையாக இருக்கிறாய். என்றோ ஒருநாள் அந்த இரகசியத்தை உன் தோழனிடம் சொல்லுவாயல்லவா?

ரொதோல் : ஆம் சொல்லுவேன். இப்பொழுது என்னைத் தொந்தரவு செய்யாதே விட்டுவிடு.

(அனாபெஸ்தோ போகிறான். அங்கிருந்த நீண்ட இருக்கையில் உட்கார்ந்து தன் கைகளில் முகத்தை மறைத்துக்கொண்டு ஏதேதோ எண்ணமிடுகிறான் ரொதோல்போ — ஓமோதேய் கண்ணைத் திறந்து

பார்க்கிறான். மெல்ல எழுந்து ரொதோல்போவின் பின்சென்று நிற்கிறான்)



## காட்சி—4

ரொதோல்போ—ஓமோதேய்

(ஓமோதேய் ரொதோல்போவின் தோளில் கையை வைக்கிறான். ரொதோல்போ திடுக்கிட்டுத் திருப்பிப் பார்க்கிறான்)

ஓமோதேய் : ரொதோல்போவா! உன்பெயர் ரொதோல் போவல்ல அண்ணே! உன்பெயர் ரொமோனா பதுவை பல நூற்றாண்டுகளுக்குமுன் ஆண்ட பழைய குடும்பத்தைச் சேர்ந்தவன் நீ. ரொதோல்போ என்ற பொய்ப் பெயரோடு ஒவ்வொரு நகரமாகச் சுற்றித் திரிகிறாய் நீ; வேனீசில் சில சமயங்கள் வந்து தங்கினாய். ஏழாண்டுகளுக்குமுன் வேனீசில் ஓர் அழகிய கன்னிப் பெண்ணைச் சந்தித்தாய். நீ அவளைத் தொடர்ந்து போகவில்லை. வேனீசில் ஒரு கன்னிப்பெண்ணைத் தொடர்ந்து செல்வது என்பது கத்திக் குத்தைத் தேடிச்செல்வதாகும். ஆனால் மாதாக் கோவிலுக்கு அடிக்கடி வந்து கொண்டிருந்தாய். அந்தக் கன்னிப் பெண்ணும் கோவிலுக்கு வரத் தவறியது கிடையாது. உங்கள் உள்ளம் அங்கே கலந்தது. அவள் யார்? பெயர் என்ன? என்று தெரிந்து கொள்ளாமலே நீ அவளை காதலித்தாய். இன்று வரையில் அவள் யார் என்பதே உனக்குத் தெரியாது. அவள் பெயர் கத்தேரினா என்று நீ நினைத்துக் கொண்டிருக்கிறாய். உனக்கு மட்டும் அவள் கத்தேரினா. இயற்பெயர் அவளுக்கு அதுவல்ல. கடிதம் எழுத வழிகிடைத்தது. எழுதினாய் அவளும் உனக்கு எழுதினாள். செசேலியா என்ற

பெயருடைய ஒரு கிழவியின் வீட்டில் நீங்கள் சந்தித்தீர்கள். நீ அவளை உயிராகக் காதலித்தாய். அவள் தன் வாழ்வுக்கு நீதான் உயிர் என்று எண்ணினாள். உண்மைக் காதல் உங்களிடையே உருப்பெற்றது. நீங்கள் ஒழுங்கு தவறி நடந்துகொள்ளவில்லை. பெருந்தன்மையோட காதலித்தீர்கள். மாசுமருவற்றே அவள் இருந்து வந்தாள். சந்திப்பால் எந்தக் களங்கமும் ஏற்படவில்லை. அவள் ஒரு பெரிய பணக்காரக் குடும்பத்தைச் சேர்ந்தவள் என்பது மட்டும் உனக்குத் தெரியும். வேனிஸில் உள்ளூர்ப் பணக்காரனே ஒரு பணக்காரப் பெண்ணை மணந்து கொள்ள முடியும். அல்லது அவன் அரசனாக வேண்டும். நீ வேனிஸ் நாட்டானுமல்ல—அரசனுமல்ல. மணவாழ்க்கை உங்கள் இருவருக்கும் எட்டாக் கனியாக இருந்தது. அவள் வருவதை நிறுத்தி விட்டாள். அவளுக்குத் திருமணம் நடந்துவிட்டது என்று கிழவி கூறினாள். மணந்தவன் யார்—அவள் பெற்றோர் யார்— என்பதை நீ அறிந்து கொள்ள முடியவில்லை. அவளை மறந்துவிட எங்கெங்கோ தேடிப்பார்த்தாய். வேனீசைவிட்டு நீ வெளியேறினாய். இத்தாலி முழுதும் ஓடிப்பார்த்தாய். அவள் நினைவு உன்னைத் தொடர்ந்துகொண்டே இருந்தது. உன் வாழ்க்கையை விளையாட்டில், கேளிக்கையில், களியாட்டத்தில் எப்படி எப்படியோ திருப்பிப் பார்த்தாய். பயனற்றது உன்எண்ணம். வேறு பெண்களின் மீது உன் பார்வையைத் திருப்பினாய். பெண்களிடத்திலே உறவாடிப் பார்த்தாய். நீட்டுவானேன் இந்த நடிகை தீஸ்பைக்கூடக் காதலித்தாய். அதுவும் பயனற்றதாகவே தோன்றியது. புதுக்காதல் ஏற்பட ஏற்பட பழைய காதல் நினைவே மேலோங்கி மேலோங்கி உன்னைத் துன்புறுத்தியது. நீ இங்குப் பதுவுக்கு அந்த நடிகை தீஸ்போடு வந்து மூன்றுமாதமாகிறது. அவள்

உன்னைத் தன் அண்ணன் என்று சொல்லிக்கொண்டிருக்கிறாள்— சர்வாதிகாரி ஆன்ழெல்லோ தீஸ்பைக் கண்டதிலிருந்து மனதைப் பறிகொடுத்து அவள்மீதே நாட்டமாக இருக்கிறான். அதுமட்டுமா இன்னும் சொல்கிறேன் கேள் பிப்ரவரித் திங்கள் பதினாறாம் நாள் மாலை முகத்தை மறைத்துக்கொண்டு ஒருபெண் மொலினோ பாலத்தின் அருகில் உன்னைச் சந்தித்தாள். உன் முன்னோர்களால் இடித்துப் பாழாக்கப்பட்ட கோட்டையின் அருகில் உன்னை அழைத்துக்கொண்டு போனாள். அது மக்கள் நடமாட்டமில்லாத இடம். அங்கு ஒரு குடிசை இருந்தது. அந்தக் குடிசையில் வேனீஸ் காதலியை நீ சந்தித்தாய். அன்று முதல் வாரத்திற்கு மூன்று தடவை அந்தக் குடிசையிலேயே உன் காதலை—உன் உயிரை—வேனீஸ் அழகுத் தேவதையைச் சந்தித்து வந்தாய். அவள் தன் குடும்பத்திற்கும் ஒழுக்கத்திற்கும் கணவனுக்கும் தன் காதலுக்கும் இழுக்குத் தேடாத வகையில் நாணயமாக—தூய உள்ளத்தோடு சந்தித்து வந்தாள். இதுவரையில் அவள் யார் என்பதை உனக்குக் கூறியது கிடையாது. அந்தப் பழைய கத்தேரினாவாகவே அவள் இருந்தாள். கடந்த திங்கள் உங்கள் இன்பவாழ்வு குலைந்தது. குடிசைக்கு வருவதை நிறுத்திக்கொண்டாள் அவள். ஐந்து வாரமாக நீ அவளைப் பார்க்கவேயில்லை. நீ அவளைத் தேடிக்கொண்டே இருக்கிறாய். ஆனால் அவளை இனிச் சந்திக்கப் பார்க்க முடியாது, எப்பொழுதும், நீ அவளைப் பார்க்க முடியாது.

ரொதோல்: (அவனை ஊடுருவிப் பார்த்து) யாரப்பா நீ?

ஓமோதேய்: வீணானக் கேள்வி. நானும் அதற்கெல்லாம் விடை கூறமாட்டேன். நீ இன்று அவளைப் பார்க்க விரும்புகிறாயா?

ரொதோல்: ஆம்! ஆம்! அவளை நான் பார்க்க விரும்புகிறேன். கடவுள்மேல் ஆணையாகச் சொல்லுகிறேன் நான் அவளை ஒரு வினாடி பார்த்தால் போதும். இறப்பதைப் பற்றிக் கவலை இல்லை எனக்கு.

ஓமோதேய்: சரி ஆகட்டும். நான் உன்னை அழைத்துப் போகிறேன்.

ரொதோல்: எங்கே?

ஓமோதேய்: அவள் வீட்டிற்கு. உன் காதலி வீட்டிற்கு.

ரொதோல்: அவள் யார்? பெயர் என்ன? சொல்—சொல்லப்பா.

ஓமோதேய்: அவள் வீட்டிற்குப் போனபிறகு சொல்கிறேன்.

ரொதோல்: நீ கடவுள் மாதிரி வந்தாய்.

ஓமோதேய்: அது கிடக்கட்டும். இன்று மாலை நிலவு எழுந்தவுடன் பனிரெண்டு மணிக்கு சாந்தோ உயிர்பானோ தெருவிலிருக்கிற கோட்டையருகில் இரு. நான் அங்கு இருப்பேன். உன்னை அழைத்துப் போகிறேன். சரியாகப் பனிரெண்டு மணிக்குத் தெரிகிறதா?

ரொதோல்: நன்றி— நீ யாரென்றுகூடச் சொல்ல மாட்டாயா?

ஓமோதேய்: நானா, நான் ஒரு முண்டம். (போகிறான்)

ரொதோல்: (தனியாக நின்றுகொண்டே) யார் இந்த மனிதன்— யாராக இருக்கக் கூடும்'. நமக்கென்ன அதைப்பற்றி— பனிரெண்டு மணி—இரவு பனிரெண்டு மணி. இன்னும் எவ்வளவோ நேரம் இருக்கிறதே. கத்தேரினா! அவன் குறிப்பிட்ட அந்தப் பனிரெண்டு மணிக்காக என் உயிரைக்கூடத் தருவேனே!

(தீஸ்ப் வருகிறாள்)

## காட்சி—5

ரொதோல்போ—தீஸ்ப்

தீஸ்ப்: நான்தான் ரொதோல்போ. வேறு யாருமில்லை. உன்னைப் பார்க்காமல் நீண்ட நேரம் என்னால் இருக்க முடியவில்லை. உன்னைவிட்டுப் பிரிவதென்றால் எனக்குத் தொல்லையாக இருக்கிறது. உன்னை எங்கும் நான் தொடருகிறேன். எப்பொழுதும் உன்னையே நினைக்கிறேன். உன்னையே பார்க்கிறேன். நான் உன் உடலின் நிழல். நீ என் உயிர்.

ரொதோல்: விழிப்பாய் இரு. தீஸ்ப். எங்கள் குடும்பம் ஒரு கொலைகாரக் குடும்பம். எங்களுக்குச் சாபக் கட்டளை போலிருக்கிறது. பாட்டன் மகன் பேரன் வாயலாக எங்களையும் அறியாமல் அந்தச் சாபம் நிறைவேறியே வருகிறது. எங்களை யார் காதலிக்கிறார்களோ அவர்களை நாங்கள் கொன்றுவிடுவோம்.

தீஸ்ப்: என்னைக் காதலிப்பதாக மட்டும் சொல், அது போதும், பிறகு நீ என்னைக் கொல்லலாம். தடை இல்லை. உன் கையால் இறப்பது உண்மையில் எனக்கு மகிழ்ச்சியே.

ரொதோல்: தீஸ்ப்...

தீஸ்ப்: ஒரு வார்த்தை...என்னைக் காதலிப்பதாகச் சொல்.

ரொதோல்: தீஸ்ப்... நீ ஒரு அழகுத் தேவதை (அவள் கையைப் பிடித்து முத்தமிடுகிறான்— மெல்லப் போகிறான்)

தீஸ்ப்: (தனியாக) ரொதோல்போ! போவதைப்பார். ஏன்என்னைவிட்டுப்போகிறான்...என்னகவலை அவன்

மனதில் இருக்கிறதோ தெரியவில்லையே (நீள் இருக்கைப் பக்கம் பார்த்துக்கொண்டே)
ஓமோதேய் விழித்துக் கொண்டாயா?

(ஓமோதேய் அரங்கிற்கு எழுந்து வருகிறான்.)



## காட்சி—6

தீஸ்ப்—ஓமோதேய்

ஓமோதேய்: ரொதோல்போவின் பெயர் ரமோனா

முண்டம் ஒரு அறிவாளி தூங்குகிற மனிதன்—கண்ணை மூடிக் காதைத் திறந்து காத்திருக்கும் பூனை.

தீஸ்ப்: என்ன சொல்லுகிறான்?

ஓமோதேய்: (தன் இசைக்கருவியைக் காட்டி) இந்த இசைக்கருவியின் நரம்புகள் விரும்புகின்ற ஒலியைக் கொடுக்கும். ஆணின் இதயம், பெண்ணின் இதயத்திலும் நரம்புகள் இருக்கின்றன. இசை மீட்டலாம்.

தீஸ்ப்: என்ன சொல்லுகிறாய்? புரியவில்லையே.

ஓமோதேய்: அதுவா. இப்பொழுது உன்னைவிட்டுச் செல்கிறானே இளைஞன் அவன் இன்றைய இரவு எங்குச் செல்கிறான் என்பதை நீ தெரிந்து கொள்ளலாம் என்பதுதான்.

தீஸ்ப்: ஒரு பெண் வீட்டிற்கா?

ஓமோதேய்: அழகிலே சிறந்த அணங்கு வீட்டிற்கு.

தீஸ்ப்: என்ன? என்ன சொல்கிறாய்? நீ யார்?

ஓமோதேய்: எனக்கொன்றும் தெரியாது.

தீஸ்ப் : நீ யார்—யாரப்பா நீ. நான் இதுவரையில் நினைத்துக்கொண்டிருந்த இசைமீட்டுவோனல்லவா நீ. சர்வாதிகாரி அப்பொழுதே சந்தேகப்பட்டார். சரியாகத்தானிருக்கிறது. -ரொதோல்போ ஒரு பெண்ணிடத்திலா. -அதுவும் இன்றைய இரவு அதுதானே நீ சொன்னாய். நீசொன்னது அதுதானே.

ஓமோதேய் : எனக்கொன்றும் தெரியாது.

தீஸ்ப் : பார்த்தாயா பொய்சொல்லுகிறாய். இருக்காது. ஒருபோதும் இருக்காது. ரொபோல்தோ என்னைக் காதலிக்கிறான். வேறு பெண் என்பது பொய்...

ஓமோதேய் : எனக்கொன்றும் தெரியாது.

தீஸ்ப் : கொடியவன்- பொய்சொல்கிறவன்- நீ பொய் சொல்கிறாய். என்னிடம் இப்படிக் கோள்மூட்டச் சொல்லி யாரோ பணம் கொடுத்திருக்கிறார்கள் உனக்கு. ரொதோல்போ என்னைக் காதலிக்கிறான். என் பகைவர்கள்- ஆம், பகைவர்கள் செய்த சூழ்ச்சி. இப்படிப் பொய்சொல்லி என்னைத் துன்பப்படுத்த முடியாது. போ போ. உன் பேச்சில் எனக்கு நம்பிக்கை இல்லை. போ உன் வேலையைப்பார்த்துக்கொண்டு போ.

ஓமோதேய் : சர்வாதிகாரி ஆன்ழெல்லா கழுத்தில் தங்கச் சங்கிலி போட்டுக் கொண்டிருக்கிறாரே அதில் அழகிய வேலைப்பாடமைந்து பொருள் ஒன்று தொங்குகிறதே அது என்ன என்று உனக்குத் தெரியுமா? அது ஒரு சாவி. அந்தப் பொருள்மேல் உனக்கு ஆசை இருப்பதாக நடித்து—அதைக்கேள்— அதைக்கொண்டு நாம் என்ன செய்யப் போகிறோம் என்பதை வெளிக்குக் காட்டிவிடாதே நினைவிருக்கட்டும்.

தீஸ்ப் : அது ஒரு சாவி என்றா சொல்கிறாய்? ஊகும் நான் கேட்கமாட்டேன். எதையும் கேட்கமாட்டேன். நான்ரொதோல்போவைச்சந்தேகிக்கவேண்டுமென்பது உன் நோக்கமோ-எனக்கு அந்தச் சாவி வேண்டாம். போ—உன் பேச்சை நான் கேட்கமாட்டேன்.

ஓமோதேய் : அதோ அவரும் வருகிறார். அந்தச் சாவி உன்னிடத்தில் கிடைத்தபிறகு யாவும் விளக்கமாகச் சொல்கிறேன். அந்தச் சாவிதான் இரவு உனக்குப் பயன்படப்போகிறது. அதை எப்படியாவது வாங்கிக் கொள். இன்னும் கால்மணிநேரத்தில் நான் திரும்பி வந்து உன்னைப் பார்க்கிறேன்.

தீஸ்ப் : அறிவற்றவன்! நான் சொன்னது உனக்குக் கேட்கவில்லையா? -மீண்டும் கூறுகிறேன்- எனக்கு அந்தச் சாவி வேண்டாம். ரொதோல்போ மீது எனக்கு நம்பிக்கை உண்டு- அந்தச் சாவி எனக்கு வேண்டாம். நான் சர்வாதிகாரியிடத்தில் இதைப் பற்றிக் கூறமாட்டேன். உன்மேல் எனக்கு நம்பிக்கை இல்லை. நீ திரும்பி வரவேண்டாம். பயனற்றது போ.

ஓமோதேய் : இன்னும் கால்மணி நேரத்தில் (போகிறான்)
(ஆன்மெழல்லோ வருகிறான்)

## காட்சி—7

### தீஸ்ப்—ஆன்மெழல்லோ

தீஸ்ப் : ஆ- நீங்களா- பிரபுவே-யாரைத் தேடுகிறீர்கள்?

ஆன்மெழல் : ஆம். விர்ழிலோதஸ்காவைத் தேடுகிறேன். அவனிடம் ஒரு செய்தி கூறவேண்டும்.

தீஸ்ப் : இன்னும்என்மீது ஐயமும் பொறாமையும்தானா ?

ஆன்மெழல் : ஆம்...

தீஸ்ப் : நீங்கள் ஒரு பைத்யம். எதற்காகப் பொறாமைப் படவேண்டும். — அதனால் என்ன நன்மை நான் ஒரு மனிதனைக் காதலிக்கிறேன். — ஒருக்காலமும் நான் அவர்மேல் பொறாமைப்படமாட்டேன்.

ஆன்ழெல் : அப்படியானால் நீ யாரையும் மனமாறக் காதலிக்கவில்லை என்றுதான் பொருள்.

தீஸ்ப் : ஆம். நான் ஒருவரை உண்மையாகக் காதலிக் கிறேன்.

ஆன்ழெல் : யார் அது?

தீஸ்ப் : நீங்கள்தான்.

ஆன்ழெல் : உண்மையாகவா? நீ என்னையா காதலிக் கிறாய். நிச்சயமாகவா. என்னிடம் விளையாடாதே என்னசொன்னாய். எதோ மறுமுறை சொல் கேட்போம்.

தீஸ்ப் : நான் உங்களைக் காதலிக்கிறேன். (மகிழ்ச்சி யோடு ஆன்ழெல்லோ அவளருகில் நெருங்குகிறான். அவள் அவன் கழுத்திலிருந்த தங்கச் சங்கிலியை எடுத்து) அட இது என்ன நகை. நன்றாக இருக்கிறதே நான் இவ்வளவு நாட்களாக இதைப் பார்த்த தில்லையே – நல்ல வேலைப்பாடு அழகாக இருக்கிறது. இது என்ன இது. பெண்களுக்கு ஏற்ற நகை போலல்லவா இருக்கிறது இது.

ஆன்ழெல் : தீஸ்ப்—என் கண்ணே—இன்னும் ஒருமுறை அந்த வார்த்தையைச் சொல். "நான் உங்களைக் காதலிக்கிறேன்" என் உடலெல்லாம் பூரிக்கிறது இந்தச் சொல்லைக் கேட்டு.

தீஸ்ப் : சரி—இது என்ன நகை சொல்லுங்களேன்.

ஆன்ழெல் : அதுவா? அது ஒரு சாவி.

தீஸ்ப் : சாவியா நான் அப்பொழுதே ஐயப்பட்டேன். இதனாலேயா திறக்கமுடியும்—

ஆன்மெழல் : ஆம் என் கண்ணே.

தீஸ்ப் : அது சாவியாக இருப்பதால் அது எனக்கு வேண்டாம்.

ஆன்மெழல் : சற்றுமுன்பு ஆசைப்பட்டாயே!.

தீஸ்ப் : ஏதோ நகையென்று நினைத்தேன்.

ஆன்மெழல் : எடுத்துக்கொள் (தங்கச் சங்கிலியிலிருந்து அந்தச் சாவியைக் கழற்றுகிறான்).

தீஸ்ப் : வேண்டாம். வேண்டாம் அது சாவியென்று தெரிந்திருந்தால் நான் அதைப்பற்றியே கேட்டிருக்க மாட்டேன். அது எனக்குவேண்டாம். உங்களுக்குத் தேவையாக இருக்கும்.

ஆன்மெழல் : எப்பொழுதோ தேவை. அடிக்கடி அல்ல. என்னிடத்தில் இதேசாவி வேறொன்று இருக்கிறது நீ எடுத்துக்கொள்.

தீஸ்ப் : வேண்டாம் எனக்கு எதற்குச் சாவி. மிகச் சிறியதாயிருக்கிறதே — இதைக்கொண்டா கதவு களைத்திறக்க இயலும்.

ஆன்மெழல் : இந்தச் சாவி இரகசியப் பூட்டுகளுக்காகச் செய்யப்பட்டது. ஒரு படுக்கை அறையைக்கூட திறக்க லாம். பரவாயில்லை. நீ இதை எடுத்துக்கொள்.

தீஸ்ப் : நீங்கள் கட்டாயப்படுத்துவதால் எடுத்துக்கொள் கிறேன். பெண்களுக்கேற்ற நகையாகத்தான் இது இருக்கிறது. (சாவி வாங்கிக்கொள்கிறாள்).

ஆன்மெழல் : நற்காலம் எனக்கு! ஏதோ ஒன்று என்னிடத்திலிருந்து பெற்றுக் கொண்டாயே அதுவே போதும். மகிழ்ச்சி.

தீஸ்ப் : வேனீஸிலிருந்து வந்த தூதுவரைச் சற்றுமுன் தேடினீர்களல்லவா. மறந்தேபோனேன். அதோ விர்ழிலியோதொஸ்கோ, வேனீஸ் குடியரசுத் தூதுவன். உங்களுக்காகத்தான் அங்கே காத்துக் கொண்டிருக்கிறார். நல்ல மனிதர் — போங்கள்— நேரமாகிறது போங்கள் பிறகு பேசுவோம்.

ஆன்மெழல் : உண்மையாகவா?

தீஸ்ப் : நீங்கள் அவரிடம் ஏதோ செய்தி பேசவேண்டு மென்று சற்றுமுன்பு தேடவில்லையா—போங்கள்.

ஆன்மெழல் : என்னைவிட்டுப் போவதற்காகவா இந்தப் பொய்.

தீஸ்ப் : அதோ—அதோ அங்கே இருக்கிறார்.

ஆன்மெழல் : (ஆன்மெழல்லோ அவள் கையைப்பிடித்து முத்தமிட்டு) தீஸ்ப் நீ என்னைக் காதலிக்கிறா யல்லவா!

தீஸ்ப் : அதோ—அதோ தொஸ்கோ. உங்களுக்காகக் காத்துக்கொண்டிருக்கிறார். (ஆன்மெழல்லோ போகிறார்— ஓமோதேய் அரங்கிற்குவருகிறான்— தீஸ்ப் அவனிடத்திற்கு ஓடுகிறாள்)

## காட்சி—8

தீஸ்ப்—ஓமோதேய்

தீஸ்ப் : இதோ நீ சொன்ன சாவிவாங்கி வந்துவிட்டேன்.

ஓமோதேய் : காட்டு—(வாங்கித் திருப்பித்திருப்பார்த்து) ஆம்—இதுவேதான் சர்வாதிகாரியின் அரண்மனையின் கீழ்ப்பாகத்தில் ஒரு பகுதி மொலினா பாலத்தைப் பார்த்தாற்போல் இருக்கிறது. இன்று மாலை. அங்கே

ஒரு மரச்சமானுக்குப் பின்புறமாகிலும் திரைச் சீலைக்குப் பின்புறமாகிலும் நல்ல இடமாகப் பார்த்து மறைந்து இரு. நள்ளிரவுக்குப் பின் இரண்டு மணிக்கு வந்து நான் உன்னை அழைத்துப்போகிறேன்.

தீஸ்ப் : (பணப்பையை அவனுக்குக் கொடுத்து) இன்னும் அதிகமாகத் தருகிறேன். அச்சாரமாக இதைப் பெற்றுக்கொள்.

ஓமோதேய் : உங்கள் விருப்பப்படி நடக்கட்டும். நான் சொல்வதைக் கேளுங்கள். இரவு இரண்டு மணிக்கு நான் உங்களை வந்து பார்ப்பேன். நீங்கள் போக வேண்டிய வழியைக் காட்டுவேன். முதல் கதவு இதோ நீங்கள் வைத்திருக்கும் சாவியால் திறக்கலாம்—பிறகு உங்களைவிட்டு விட்டுச் சென்றுவிடுவேன். மற்றவை நீங்களே பார்த்துக்கொள்ளலாம். நேராக அந்த வழியே போகவேண்டியதுதான்.

தீஸ்ப் : முதல் கதவைத் தாண்டிய பிறகு என்ன இருக்கும்.

ஓமோதேய் : இரண்டாவது கதவு—அதையும் இந்தச் சாவியாலேயே திறக்கலாம்.

தீஸ்ப் : இரண்டாவதற்குப் பிறகு.

ஓமோதேய் : மூன்றாவது கதவு அதையும் இச்சாவியே திறக்கும்.

தீஸ்ப் : மூன்றாவதற்குப் பிறகு?

ஓமோதேய் : நீங்களே பார்ப்பீர்கள்

## களம்—2

### இரண்டாம் நாள்

ஆடம்பரமாக அலங்கரிக்கப்பட்ட ஒரு அறை. எங்கும் பொன் சரிகை இழைத்த சிகப்புப் பட்டுச் சீலைகள் தொங்குகின்றன. இடப்பக்கம் மூலையில் அழகிய தந்தக்கட்டில். கட்டிலின் நான்கு கால்களின்மீதும் வெள்ளிக் கம்பங்கள் வேலைப் பாடோடு அமைந்து நீண்டு உயர்ந்து நிற்கின்றன. கால்களில் அழகிய சால்வைகள் கட்டிலை மறைத்துத் தொங்குகின்றன. வேண்டும்போது விலக்க—கட்டிலை மூடிக்கொள்ள ஏற்றவாறு பட்டுக்கயிறுகள் பொறுத்தப்பட்டுள்ளன. வலப் புறம் திறந்த ஜன்னல். பட்டுத்திரையால் மூடிய கதவு—கதவுக்கருகில் கடவுளை வணங்க ஓர் இருக்கை. அதற்குமேல் சுவரில் மாட்டப்பட்ட பொலிவான பித்தளைச் சிலுவை ஒன்று. அறையின் உள்—இரண்டு கதவுகளை உடைய பெரிய வாயிற்படி. மற்றொரு சிறிய கதவு அழகாக அலங்கரிக்கப்பட்டுள்ளது சிறிய மேஜை—மேஜையின்மீது கடவுள் சிலை. விளக்கு—நாற்காலி வெளியில்—நிலாமுற்றம்—பூச்செடித் தொட்டிகள்—மணிக்கூண்டு.

### காட்சி—1

தப்ன், ரெழினெல்லா, பிறகு ஓமோதேய்

ரெழினெல் : தப்ன் கேட்டாயா? இராக்காவற்காரன் என்னிடம் கூறினான். உண்மைதானாம். சிறிது நாட்களுக்கு முன்புதான் நடந்ததாம். ராணி முன்பு

வேனீஸிக்குக் போய்வந்தார்களே அப்பொழுது தானாம். ஒரு துப்பறிபவன். நன்றி கெட்ட துப்பறிபவன். ராணி அம்மாமீது காதல்கொண்டா னாம். துணிந்து கடிதங்கூட எழுதினானாம். அவர் களைப் பார்க்கவேண்டுமென்று. அது நடக்கக் கூடியதா? ராணீ அவனை. அடித்துத் துரத்தச் சொன்னார்களாம். நல்லவேலை செய்தார்கள்.

தப்ன் : (கடவுளை வணங்குகின்ற இருக்கையில் (நாற்காலி) அருகில் இருந்த கதவைத் திறந்து கொண்டே) சரி ரெழினெல்லா ராணி அம்மாள் படிக்கிற நேரம் இது. சீக்கிரம் வேலையை முடி.

ரெழினெல் : (மேஜைமீது புத்தகங்களை அடுக்கிக் கொண்டே)

மற்றொரு செய்தி—அடேயப்பா—அது மிகக் கொடுமையானது. அது எனக்கு நன்றாகத் தெரியும். நம் தலைவன் இடத்தில் சொல்வதற்காகப் போனான் அந்த அரண்மனை வேலைக்காரன். அவ்வளவுதான். அன்று மாலையே திடீரென்று அவன் இறந்து விட்டான். ஏன் தெரியுமா அது. நஞ்சு—நான் உனக்கு முன்கூட்டியே சொல்லுகிறேன். விழிப்பாக வாயை மூடிக்கொண்டு இரு. இந்தக் கோட்டைச்சுவர் கள் ஒவ்வொன்றிலும் சி. டி. எக்ஸ் (C. D. X.) ஒவ்வொன்று கேட்டுக் கொண்டே இருக்கிறது தெரிகிறதா—

தப்ன் : ஊம் விரைவாக வேலையை முடி. இன்னொரு முறை பேசுவோம். அம்மா காத்துக்கொண்டிருக் கிறார்கள்.

ரெழினெல் : நூல்களை அடுக்கிக்கொண்டே மேஜையின் மேல் எதையோ பார்த்துக்கொண்டே] உனக்கு அவசரமாக இருந்தால் நீ போ இதோ உன்பின்னே வந்துகொண்டே இருக்கிறேன்.

[ரெழினெல்லா பார்ப்பதற்குமுன் கதவை மூடிக் கொண்டு அறைவிட்டுப் போகிறாள் தப்ன்] தப்ன்! இந்தப் பாழாய்ப்போன கோட்டையைப் பற்றி இன்னும் உனக்குச் சொல்லுகிறேன் கேள். இந்த ஒரு இடத்தில்தான் சற்றுப் பயமில்லாமல் பேசலாம். நிச்சயமாக இதை யாரும் கேட்கமுடியாது. எதுவேண்டுமானாலும் பேசலாம். இந்தக் கோட்டையில் இங்குதான் எது பேசினாலும் வெளிக்குக் கேட்காதாம். யாரும் மறைந்து கேட்கமுடியாதாம்.

[இந்தக் கடைசி வார்த்தையை அவள் சொல்லிக் கொண்டிருக்கும்போதுதான் அறையிலிருந்த பாத்திரங்கள் வைக்கும் சிறிய அலமாரி தன்னில் தானே சுழன்று ஓமோதேய்க்கு வழிவிட்டுத் திரும்பவும் மூடிக்கொள்கிறது. இது அவளுக்குத் தெரியாது.]

ஓமோதேய்: இந்த ஒரு இடத்தில்தான் சற்றுப் பயமில்லாமல் பேசலாம். நிச்சயமா இதை யாரும் கேட்கமுடியாது.

ரெழினெல்: ஆ....கடவுளே!

ஓமோதேய்: சத்தம் வரப்போகிறது. (தன் மேலாடையில் மறைந்திருந்த வேனீஸ் பதின்மர் குழுவின் ஒற்றன் என்ற ஸி. டி. எக்ஸ். என்ற அடையாளத்தைக் காட்டுகிறான். ரெழினெல்லா அந்த அடையாளத்தையும் ஆணையும் பயத்தோடே பார்க்கிறாள்.)

எங்களில் யாரையாவது ஒருவனைப் பார்த்த செய்தியை யாராக இருந்தாலும், யாருக்காகிலும் சிறு சைகைமூலம் கூடத் தெரிவித்தால் போதும். விடிந்தால், அவர்கள் உயிர் இருக்காது. இது உனக்குத் தெரியுமல்லவா. நினைவிருக்கட்டும்.

ரெழினெல்: சேசுவே! எந்த வழியால் இவன் வந்தான்.

ஓமோதேய்: எந்த வழியாலுமல்ல.

ரெழினெல்: சேசுவே!

ஓமோதேய் : நான் கேட்பதற்கெல்லாம் விடை கூறவேண்டும். என்னை ஏமாற்றக்கூடாது. உன் உயிர் மேல் நினைவிருக்கட்டும் (உள்ளே இருக்கிற பெரிய கதவைக் காட்டி) இந்த வழி எங்குச் செல்கிறது.

ரெழினெல் : சர்வாதிகாரியின் படுக்கை அறைக்கு

ஓமோதேய் : (சிறிய கதவைக் காட்டி) - இது?

ரெழினெல் : இது ரகசிய வழி. கோட்டையின் கீழ்ப் பக்கம் செல்கிறது. இதன் சாவி சர்வாதிகாரி ஒருவர் இடத்தில்தான் உண்டு.

ஓமோதேய் : (கடவுளைத் தொழும் இருக்கையின் அருகில் உள்ள கதவைக் காட்டி) - இது?

ரெழினெல் : ராணியின் பூஜை அறை-

ஓமோதேய் : அந்த அறையில் ஏதாவது வழி இருக்கிறதா.

ரெழினெல் : இல்லை. இரும்புக்கம்பிகள் பதித்த ஒரே ஒரு சன்னல் தான் உண்டு.

ஓமோதேய் : (ஓமோதேய் சன்னலருகில்போகிறான்)- இந்த உயரமேதான் இருக்கிறது. அந்தச் சன்னலும் இருக்கட்டும். என்பது அடி உயரமான சுவர். கீழே பெரிய ஆறு - ஊம். இது என்ன சிறிய படிக்கட்டு. இது எங்கே ஏறுகிறது?

ரெழினெல் : என் அறைக்கும், தப்ன் அறைக்கும் போகிறது.

ஓமோதேய் : அந்த அறையில் ஏதாவது வழி இருக்கிறதா?

ரெழினெல் : இல்லை இரும்புக் கம்பிகள் ஒரே ஒரு சன்னல்தான் உண்டு. வேறு வழி கிடையாது.-

ஓமோதேய் : உன் ராணி இங்கு வந்த உடன் நீ உன் அறைக்குச் சென்று விடவேண்டும். எதையும் கவனிக்காது - எதையும் சொல்லாது நீ இருக்க வேண்டும். தெரிகிறதா.

ரெழினெல் : அப்படியே நடக்கிறேன்.

ஓமோதேய் : உன் ராணி எங்கே.

ரெழினெல் : பூஜை அறையில் - கடவுளைத் தொழுகிறார்கள்.

ஓமோதேய் : பிறகு இங்கு வருவார்களா?

ரெழினெல் : ஆம் - வருவார்கள்.

ஓமோதேய் : அரைமணி நேரத்திற்கு முன் வர மாட்டார்களே.

ரெழினெல் : இல்லை - வரமாட்டார்கள்.

ஓமோதேய் : சரி - போ—வாயைத் திறக்கப்போகிறாய். இங்கு என்ன நடந்தாலும் அதைப்பற்றி நீ கவனிக்கக் கூடாது. வாயைத் திறக்கக்கூடாது. நடக்கிறபடி விட வேண்டும். பூனைஎலியோடுவிளையாடுகிறது. அதைப் பற்றி உனக்கென்ன?என்னைப் பார்த்தாய் அல்லவா—ஒரு கண் அசைவு சாடை, சீண்டுதல் எது செய்தாலும் எனக்குத் தெரியும்—போ—

ரெழினெல் : கடவுளே! இங்கு யார் சாவப்போகிறார்களோ?

ஓமோதேய் : வாயைத் திறந்தாயோ—நீதான் சாவாய். (ஓமோதேய் அவளுக்குச் சைகை காட்டுகிறான். அவள் தன் அறைக்குப் போய்விடுகிறாள். ஓமோதேய் அந்தப் பாத்திரங்கள் வைக்கும் சிறிய அலமாரியின் அருகில் போகிறான். அது சுழன்று வழி விடுகிறது.)

ரொதோல்போ இப்பொழுது நீங்கள் வரலாம் ஒன்பது படிகளே இருக்கின்றன—ஏறுங்கள் மேலே.

(படியில் ஏறும் சத்தம் கேட்கிறது—ரொதோல்போ வருகிறான்)

## காட்சி—2

ஓமோதேய்—ரொதோல்போ-போர்வையை மூடிக்கொண்டிருக்கிறான்.

ஓமோதேய் : வாருங்கள்

ரொதோல் : நான் எங்கே இருக்கிறேன்?

ஓமோதேய் : நீர் எங்கே வாஇருக்கிறீர். தூக்குமேடையின் மேல் இருக்கிறீர் என்று நினைக்கிறேன்.

ரொதோல் : என்ன நீங்கள் சொல்வது புரியவில்லையே.

ஓமோதேய் : நீங்கள் கேள்விப்பட்டதில்லையா? பதுவில் ஒரு அறை, பயங்கரமான அறை. மலரும், மணமும், காதலும்கூட இருக்கலாம். அந்த அறையில் ஏழை அல்லது கோமான்—கிழவன் அல்லது காளை யாராக இருந்தாலும் நுழைவதோ கதவைத் திறப்பதோ கொடிய குற்றம்—அப்படிச் செய்தால் உடனே சாவு—இது உங்களுக்குத் தெரியாதா—கேள்விப்பட்டதுகூட இல்லையா.

ரொதோல் : ஆம் கேள்விப்பட்டிருக்கிறேன். சர்வாதிகாரியின் மனைவி அறை.

ஓமோதேய் : அதே அறைதான்...

ரொதோல் : இதுவா?

ஓமோதேய் : சர்வாதிகாரியின் மனைவி அறை. ஆம்.

ரொதோல் : என் காதலி....

ஓமோதேய் : கத்தேரினா பிரகாதனி—பது சர்வாதிகாரி ஆன்ழெல்லோ மலிப் பியரியின் மனைவி

ரொதோல் : கத்தேரினா! சர்வாதிகாரியின் மனைவி! உண்மைதானா?

ஓமோதேய் : உனக்குப் பயமாக இருந்தால்—இன்னும் நேரமிருக்கிறது. இதோஇந்த வழி திரும்பிப் போகலாம்.

ரொதோல் : பயம்! எனக்காகவா — இல்லை,— அவளுக்காக-போகட்டும் நீ யார்?

ஓமோதேய் : நீ கட்டாயப்படுத்துவதனால்—கேள் சொல்கிறேன். ஒரு வாரத்திற்கு முன்பு நள்ளிரவில் நீ தனியாகப் போய்க்கொண்டிருந்தாய். மாதாக் கோவிலுக்கு பின்புறம் வாட் போர் சத்தமும் கூச்சலும் கேட்டு ஓடி-வந்தாய்.

ரொதோல் : ஆம் மூன்று கயவர்கள் ஒரு முகமூடியணிந்த மனிதனைக் கொல்லப் போனார்கள். நான் தடுத்துக் காப்பாற்றினேன்.

ஓமோதேய் : அந்த முகமூடி நான்தான்—என் உயிரைக் காத்த உனக்கு ஒரு நன்றி மொழிகூடக் கூறாது நான் யார் என் பெயரென்னவென்று கூடக் கூறாது போனவன் நான்தான். அன்றிரவிலிருந்து உனக்கு நன்மைசெய்யவேண்டுமென்று நினைத்தேன். என்னை உங்களுக்குத் தெரியாது. ஆனால் உங்களை எனக்குத் தெரியும். உங்கள் காதலியை நீங்கள் சந்திக்கவேண்டும் என்பதற்காவன செய்தேன். நன்றியறிதலாக. வேறொன்று மில்லை. இப்பொழுதாவது என்னை நம்புகிறீர்களா?

ரொதோல் : ஆம்! ஆம்! நன்றி—அவளை யாரோ பழிவாங்க இப்படிச் செய்வதாய்நினைத்தேன். எனக்கு ஒரு பெருஞ்சுமையாக இது இருந்தது. நீ அதை நீக்கினாய். உனக்கு நன்றி. நீ இனி என் தோழன். நான் உனக்குச் செய்ததைவிட எத்தனை மடங்கு மேலானதைச் செய்துவிட்டாய். நான் கத்தேரினாவைப் பார்க்கவில்லையென்றால் நீண்ட நாள் என்னால் உயிர்வாழமுடியாது. தற்கொலை கூடச் செய்துகொள்வேன். அவ்வளவு பைத்தியம் வெறி தலைக்கேறி இருக்கிறது - நான் உன் உயிரை மீட்டேன். நீயோ என் உயிர் இதயம் இரண்டையும் மீட்டாய்.

ஓமோதேய் : நீங்கள் இங்கே இருங்கள்.

ரொதோல் : இங்கேயே இருந்தால்! இங்கேயே இருந்தால் உன்னிடத்தில் உண்மையைச் சொல்கிறேன். அவளைப் பார்ப்பதற்கு—அவள் ஒரு மணி ஒரு நிமிடம் எப்பேர்ப் பட்ட நிலைமை என்பது உனக்குத் தெரியாதா. பார்க்கவேண்டும் அவள் எங்கே இருக்கிறாள்?

ஓமோதேய் : அங்கே—அவள் பூஜைஅறையில்

ரொதோல் : எங்கே—அவளை நான் பார்ப்பது?

ஓமோதேய் : இங்கேதான்

ரொதோல் : எப்பொழுது

ஓமோதேய் : இன்னும் கால்மணிநேரத்தில்.

ரொதோல் : ஆ—கடவுளே!

ஓமோதேய் : (அவனுக்கு ஒவ்வொரு கதவாகக் காட்டி) விழிப்பாய் இரு. அதோ அதுதான் சர்வாதிகாரியின் அறை—இப்பொழுது அவர் உறங்கிக் கொண்டு இருப்பார். எந்தச் சத்தமும் அவர் தூக்கத்தைக் கலைக்காது—நம்மையும் கத்தேரினாவையும் தவிர— நீங்கள் கவலையற்று இருக்கலாம். நாம் வந்த வழி— என்னைத்தவிர யாருக்கும் தெரியாது. நான் அதை யாருக்கும் சொல்லமாட்டேன். காலையில் நீங்கள் தப்பித்துப்போய்விடலாம். (சற்று உள்ளே சென்று) இதுதான் கணவன் வருகின்ற வழி. கணவனும் காதலனும் ஒன்றுதானே. (சன்னலைக்காட்டி) எந்தக் காரணத்தை முன்னிட்டும் இந்த வழியைப் பயன் படுத்தாதீர்கள். எண்பது அடிஉயரம் அது மட்டுமல்ல— கீழே ஆறு—வரட்டுமா?

ரொதோல் : இன்னும் கால்மணி நேரமா?

ஓமோதேய் : ஆம்.

ரொதோல் : தனியாக வருவாளா?

ஓமோதேய் : நிச்சயமாகக் கூறமுடியாது. எதற்கும் சற்று ஒதுங்கி மறைந்து இருங்கள்.

ரொதோல் : எங்கே?

ஓமோதேய் : கட்டிலுக்குப் பின்புறம் அல்லது நிலாமுற்றத்தில்—அவசியம் என்று தோன்றினால் இந்தப் படியால் மேலே ஏறிவிடுங்கள். பூஜை அறையில் நாற்காலி ஓசை கேட்கிறது. ராணி கத்தேரினா வரப்போகிறார். நாம் பிரியவேண்டிய நேரம் வந்துவிட்டது. வரட்டுமா?

ரொதோல் : நீ யாராக இருந்தாலும்—இவ்வளவு உதவி எனக்குச் செய்தபிறகு என் உடல்பொருள் ஆவி—யாவும் உன்னுடையதே!

(முற்றத்தில் மறைந்துகொள்கிறான் ஓமோதேய். அரங்கில் முன்வந்து தனக்குள்ளே) அவள் உங்களுக்கல்ல கோமானே! ரொதோல்போ தன்னைப் பார்க்கிறானா என்று பார்க்கிறான். மார்பில் இருந்த ஒரு கடிதத்தை எடுத்து மேஜைமீது வைத்துவிட்டு இரகசிய வழியே மறைந்து விடுகிறான் ஓமோதேய்—பூஜை அறையிலிருந்து கத்தேரினாவும்—தப்னும் வருகின்றனர். கத்தேரினா வேனீஸ் கோமகள் போல உடை உடுத்தியிருக்கிறாள்)

## காட்சி—3

கத்தேரினா—தப்ன்—

ரொதோல்போ : (முற்றத்தில் மறைந்து கொண்டிருக்கிறான்.)

கத்தேரினா : ஒரு திங்களுக்கு மேலாகிறது! தப்ன் உனக்குத் தெரியுமாடி. ஆம் ஒரு திங்களுக்கு மேலாகிறது! ஊம்! தீர்ந்தது! தூங்கமுடிந்தாலாகிலும் கனவிலாவது காணலாம்! தூக்கம்கூட வரமாட்டேன் என்கிறதே! ரெழினெல்லா எங்கே?

தப்ன் : அவள் அறைக்குச் சென்று கடவுளை வணங்கு கிறாள்—உங்களை மகிழ்விக்க நான் சென்று அவளை அழைத்து வரட்டுமா?

கத்தேரினா : வேண்டாம்—கடவுளை மகிழ்விக்க சற்று நேரம் அவள் வணங்கட்டும்!

தப்ன் : இந்தச் சன்னலை மூடட்டுமா அம்மா?

கத்தேரினா : தப்ன்! கேட்டாயா! ஐந்து வாரங்கள் ஆகின்றன. அவரைப் பார்க்காத ஐந்து வாரங்களும் ஐந்து யுகங்களாகவல்லவா தோன்றுகிறது. வேண்டாம் சன்னலை மூடாதே — தொட்டுப்பார் என் தலையை கொதிப்பேறிய என் தலைக்குச் சிறிது குளிர்காற்றை அதுதான் தருகிறது. இனி அவரைப் பார்க்க முடியாது! சிறையில் அடைக்கப்பட்டேன்! இந்த அறையில் யார் நுழைந்தாலும் சாவைத் தழுவ வேண்டும். சர்வாதிகாரியின் கட்டளை இது! ஆம். அவரைப் பார்க்கக்கூடாது. இந்த அறையில் அவரைப்பார்க்க நினைப்பது சாவுக்கவரை அழைப்பதைப் போலல்லவா. வேண்டாம். அவரைப் பார்க்க நினைக்கவேண்டாம்! என் காதல்! ஆம்! கொடுத்து வைக்காதவள் நான்! கடவுளே எதற்காக அவர் பதுவிற்கு வந்தார்? எதற்காக மீண்டும் அவரை இங்குச் சந்தித்தேன்? இப்படி விரைவில் என் இன்பக்கோட்டை தரைமட்டமாகுமென்றறிந்திருந்தால் அந்தக் குடிசையில் அவரை வரவேற்றிருக்க மாட்டேனே. மறந்திருந்த அவர் மனதிற்குத் தொல்லைகளையல்லவா உண்டாக்கிவிட்டேன். இனி நான் வெளியே போக முடியாது. இந்த ஒரே ஒரு சன்னல் தான் சிறு காற்றையும் சூரிய ஒளியையும் எனக்களிக்கிறது. அந்த ஒளியிலே அவர் முகத்தை அந்த இன்பமுகத்தைப் பார்க்கிறேன். ரொதோல்போ! அதையும் மூடுகிறேன் என்கிறாயே தப்ன்- சொல்லடி சொல்—நான் இனி அவரைப் பார்க்க முடியாதென்று நம்புகிறாயா?

தப்ன் : ராணி அம்மா......

கத்தேரினா : நான் மற்ற பெண்களைப் போலல்ல. விழா - விளையாட்டு இன்பப் பொழுது போக்கு இவை எதுவும் என்னை மகிழ்விக்க மறுக்கின்றன. ஏழு ஆண்டுகளாக எனக்கு ஒரே ஒரு எண்ணந்தான் "ரொதோல்போ" நான் எதைப் பார்த்தாலும் எங்குப் பார்த்தாலும் ரொதோல்போவே தோன்று கிறார். என் கண்கள் அவர் உருவிற்கென்றே படைக் கப்பட்டன போலும். வேறு எதுவும் கண்களுக்குத் தோன்றமாட்டேன் என்கிறதே. ஏழு ஆண்டு களாக அவரைக் கண்டது முதல் இன்று வரையில் என் எண்ணமெல்லாம் நான் எங்கு இருந்தாலும் எது செய்தாலும் அவரையே வட்ட மிடுகிறதடி. நான் கன்னியாக இருந்தேன். சிறிதுகூட ஈவு இரக்கமின்றி எனக்குத் திருமணம் செய்து விட்டார்கள். என் வாழ்க்கையைப் பார்த்தாயா? எல்லா வசதி இருந்தும் என் வாழ்க்கை வறண்ட பாலையாகவல்லவா இருக்கிறது.

தப்ன் : துன்பம் தருகின்ற இந்த நினைவுகளையெல்லாம் உங்கள் மனதிலிருந்து ஓட்டிவிடுங்கள் அம்மா.

கத்தேரினா : எப்படியடி மறப்பது. அவரும் நானும் போக்கிய அந்த இன்பமான மாலை நேரங்களை மறக்க முடியுமா? என்ன இனிய பேச்சு—அடக்கமான ஒழுங்கைமீறாத அவர் செயல்—குணம்—போடி மறக்க முனைய முனைய வளர்ந்து தழைக்கின்றன அந்த நினைவுகள்—நீ போய் உறங்கு பாவம்! நீயும் ஏன் என்னுடன் கவலைப்படவேண்டும்—நான் தான் அதற்காகவே பிறந்துவிட்டேன். நீயுமா? அதில் பங்கு கொள்ளவேண்டும் போய் ரெழினெலாவோடு உறங்கு.

தப்ன் : ராணி அம்மாவுக்கு ஏதாவது....?

கத்தேரினா : ஒன்றும் தேவையில்லை நான் பார்த்துக் கொள்கிறேன். போ-போடிப் போய் தூங்கு போ.

தப்ன் : கடவுள் உங்கள் கவலையை மாற்றட்டும். (தன் அறைக்குத் தப்ன் போகிறாள்).

## காட்சி—4

கத்தேரினா-ரொதோல்போ-முற்றத்தில்

கத்தேரினா : (தனியாக) அடடா! என்ன இனிமையான பாட்டு. என் காலடியில் அமர்ந்து இனிய குரலால் பாடிய அந்தப் பாட்டுகள்! இன்னும் என் காதுகளில் ஒலிக்கின்றனவே! அந்தப் பாட்டுக்களைக் கேட்க என் உயிரைக்கூடத் தருவேனே! அந்த எடுப்பு அடடா'...

(அருகிலிருந்த யாழை எடுக்கிறாள்)

இதுதானே......ஆம்...

(சிறிது நேரம் இசைக்கிறாள்)

அந்தப் பாடலைக் கேட்க - ஆம் - கேட்பதற்காக மட்டும் - அவரைப் பார்க்க அல்ல - தொலைவிலிருந்தேனும் அந்தப் பாடலைக் கேட்ட என் உயிரைக்கூட விற்றுக் கொடுப்பேன்.

(மறைந்து கொண்டிருக்கிற முற்றத்திலிருந்து ரொதோல்போ பாடுகிறான்).

பல்லவி

பாட்டு : என்னுயிர் உன்னிதயத தடைக்கலமே!
எழில் ஓவியமே! அழகே! கலந்தோம் நாமே!
அ. பல் : உன்னருகில் வந்து சின்ன குழந்தை போலச்
சிணுங்கிச் சிணுங்கிக் கெஞ்சி வட்டமிடும் (எ)
சரணங்கள் : வண்ண இசை நீ! மகரயாழ் நானே
மலர்ப்புதர் நானே தென்றலும் நீயே!
என்ன என்ன இனிக்கும் முறுவலும் நீதான்
இதழ்நான் அழகு நீ காதலும் நானே!

கத்தேரினா : (கத்தேரினா கையிலிருந்த யாழ் கீழே விழுகிறது) தெய்வமே!

ரொதோல் : மறைந்திருந்து தொடர்ந்து பாடுகிறான்.

நீலவானில் கோலம் செய்யும்
    நிலவு நில்லா தோடல் போலே
காலம் விரைந்தே ஓடும்போது
    கண்ணீரோடென் காதற் பாடல்
ஞாலம் விழுங்கும் இருட்டில் உன்றன்
    நகை முகத்தைத் தழுவிடாதோ!

கத்தேரினா : ரொதோல்போ!

ரொதோல் : (தன்மேல் போர்வையைக் கழற்றிவைத்து விட்டு அவள் காலடியில் வந்து குந்துகிறான்) கத்தேரினா!

கத்தேரினா: நீயா! நீ எப்படி இங்கு வந்தாய்? கடவுளே! உன்னைக் கண்டு மகிழ்கிறேன். இல்லை பயத்தால் சாகிறேன். எனக்காக நான் பயப்படவில்லை ரொதோல்போ! நீ எங்கே இருக்கிறாய் என்பது உனக்குத் தெரியுமா? வேறு ஏதோ ஒரு அறையைப் போன்றது இந்த அறை என்று நினைத்துக் கொண்டாயா - பாவி! சாவுக்கருகிலல்லவா நீ நிற்கிறாய்.

ரொதோல் : கவலையில்லை. உன்னைப் பார்க்காமல் இறந்திருப்பேன். இப்பொழுதோ உன்னைக் கண் குளிரப் பார்த்த பிறகு சாகப்போகிறேன். அவ்வளவு தானே - மகிழ்ச்சியோடு சாவேன்.

கத்தேரினா: நல்லதே செய்தாய். ஆம். நீ வந்ததே நல்லது தான் - உன்னைப் பார்க்காமல்நானும் சாவோடுதான் போராடிக் கொண்டிருந்தேன். இதோ உன்னைக்

கண்குளிரப் பார்க்கிறேன். என் காதலே மற்றதைப் பற்றி எனக்குக் கவலையில்லை. ஒரு மணி நேரம் உன்னோடு - பிறகு இந்தத் தளமே இடியட்டும். கவலையில்லை.

ரொதோல் : கடவுள் நம்மைக் காப்பார். நமக்கென்ன பயம். கோட்டையில் யாவரும் தூங்குகின்றார்கள். ஆனால் வந்த வழியே நான் திரும்பிப் போக முடியாது. அவ்வளவுதான்.

கத்தேரினா : எப்படி வந்தாய்?

ரொதோல் : நான் ஒரு மனிதன் உயிரை மீட்டேன். அவன் என்னைக் கூட்டி வந்தான். நான் அதைப் பற்றிப் பிறகு சொல்கிறேன். அவனைப்பற்றி நீ பயப் படாதே! எனக்கு அவன் மேல் நம்பிக்கை உண்டு.

கத்தேரினா : அப்படியானால் சரி—ரொதோல்போ... என் உயிரே

ரொதோல் : கத்தேரினா!

கத்தேரினா : எதைப்பற்றியும் நாம் கவலைப்பட வேண்டியதில்லை. நான் உனக்கு - நீ எனக்குத்தான். நான் மிக மாறி இருப்பதாக உனக்குத் தோன்ற வில்லையா. காரணம் சொல்கிறேன் கேள். உன்னைப் பிரிந்த ஐந்து வாரங்களாக நான் அழுதுகொண்டே தான் இருக்கிறேன்—நீ எப்படி இருந்தாய். சிறிதாகி லும் கவலை இருந்ததா உனக்கு நம் பிரிவு உன்னை ஒன்றும் செய்யவில்லையா? சொல் சொல்லேன்! உன் பேச்சைக் கேட்டு நீண்ட நாள் ஆகிறதே.

ரொதோல் : ஆ— கத்தேரினா என் கண்ணே! உன்னைப் பிரிந்திருப்பது கண்ணில் இருட்டை வைத்துக்கொண் டிருப்பதைப் போன்றது. நீ இல்லா வேளை துடிப் பில்லாஇதயம். விண்மீன் இல்லா இரவு. ஒவ்வொரு

நொடியும் நான் சாவை நோக்கி ஒவ்வொரு அடி எடுத்து வைத்துக்கொண்டே இருந்தேன்—பதுவில் இந்த ஐந்து வாரங்களும் விளக்கின்றிச் சுரங்கத்தில் நடமாடுவது போலல்லவா இருந்தது எனக்கு. நான் என்ன செய்தேன்—என்ன நினைத்தேன் எப்படி வாழ்ந் தேன் எனக்கொன்றுமே

கத்தேரினா ; நானும் அப்படித்தான்—நானும் அப்படித் தான், நம்முடைய நினைவுகள் ஒன்றையொன்று பின்னிக்கிடந்தனவே ஒழிய-பிரிந்து வெவ்வேறாக வில்லை. நான் உனக்குப் பல செய்திகள் கூற வேண்டும். என்னைக் காவலில் வைத்து விட்டார்கள். நான் வெளிக் கிளம்ப முடியவில்லை. நான் எவ்வளவு துன்பப்பட்டேன் தெரியுமா? கடவுளுக்குத்தான் அது தெரியும்—வெளியே தலைநீட்ட முடியாதவாறு காவலில் வைக்கப்பட்டேன் நான்—சர்வாதிகாரி சந்தேகப்பட்டே இவ்வாறு செய்து விட்டார். கடவுளே உன் குரலைக்—கேட்டு நான் எங்கே இருந் தேன் என்பதே எனக்குத் தெரியாது. அவ்வளவு மெய் மறக்கச் செய்தது உன் பாடல் எழுந்திரு—இப்படிவா- என் அருகிலே உட்காரு, மெல்ல பேசு-காலை வரை யில் இங்கேயே என் அருகில் இரு. தப்ன் உன்னைவெளி யேற்றுவாள் கவலைப்படாதே. வானலோகம் அல்லது நீ என்று சொன்னால் நான் உன்னைத்தான் விரும்பு வேன். வானலோகம் எனக்கு வேண்டாம். நீ வேண்டு மானால் தப்னைக் கேட்டுப்பார். நான் அழுது கொண்டுதானிருந்தேன். தப்ன் மிகவும் நல்லவள். ரெழினெல்லா அவள் மட்டும் என்ன? அவர்கள் இருவரும் இங்கில்லை என்றால் நான் செத்தே போயிருப்பேன். அவர்கள்தான் எனக்கு ஆறுதல் கூறி வந்தார்கள், நல்ல உள்ளங்கள் அந்த இரண்டு உள்ளங் களும். வேலைக்காரியாக இருந்தாலும் என் வேதனையை உணர்ந்தார்கள். காதலை மதித்

தார்கள்—போகட்டும். என் நிலையை—என் பெயரை யெல்லாம் தெரிந்து கொண்டாயல்லவா நான் உனக்கு இவையெல்லாம் மறைத்துத்தான் வைத்தேன்—அதற் காகக் கோபித்துக் கொள்ள மாட்டாயே - இதைப் போல நீ அடிக்கடி வர முடியுமா.

ரொதோல் : ஆம். வருவேன். அந்த மனிதன் எனக்கு உதவி செய்வான். இல்லையென்றால் என்னால் வாழ முடியாது. நீ ஒன்றுக்கும் பயப்படாதே.-நீ- என்னைக் காதலிக்கிறாய், நான் என் உயிராக உன்னைக் காதலிக்கிறேன். கடவுளுக்கு இது தெரியும். நம்மை அவர் கைவிடமாட்டார். நீ நான் கடவுள் இந்த மூவரைத்தவிர வேறு யாரும் இப்பொழுது விழித்துக் கொண்டிருக்கவில்லை. கவலைப்படாதே.

கத்தேரினா : கவலையா—ப்ஊ-இந்த இன்பநேரத்தில் கவலை எப்படி வரும்? நான் உனக்கு—நீ எனக்கு.

ரொதோல் : என் இன்பக் கடலே!

கத்தேரினா : இரு சற்றுப் பொறு. நான் நன்றாக உன்னை என் கண்குளிரப் பார்க்கவிடு காதலிக்கும் பொருளைக் கண்குளிரப் பார்ப்பது தான் இன்பம். அந்த வாய்ப்பு எப்பொழுதும் கிட்டாது. என் கண்கள் ஆசை தீருமட்டும் உன்னை அள்ளி விழுங்கட்டும். ஆம். நான் இப்பொழுதுதான் கொடுத்து வைத்தவள். பாக்கியசாலி.

(அவன் அவள் கையை முத்தமிடுகிறான். அவள் மேஜை மீதிருந்த கடிதத்தைத் பார்க்கிறாள்). அது என்ன ஏதோ கடிதம் போல் தோன்றுகிறதே நீயா அந்தக் கடிதத்தை வைத்தாய்?

ரொதோல் : இல்லை ஒருக்கால் என்னை அழைத்து வந்த அந்த மனிதன் வைத்திருக்கலாம்.

கத்தேரினா : உன்னோடு ஒரு மனிதன் வந்தானா—இரு அது என்ன கடிதமென்று பார்ப்போம். (அக் கடிதத்தை அவள் பார்க்கிறாள்)

கடிதம் : ''சில மனிதர்கள்—மதுவைக்கொண்டு மகிழ் வடைகிறார்கள். சிலர் தங்கள் வஞ்சத்தைத் தீர்த்துக் கொண்டே மகிழ்கிறார்கள். ராணி—உங் களைக் காதலித்த ஒற்றன் சிறியவன்-வஞ்சம் தீர்த்துக் கொள்ளும் ஒற்றன் பெரியவன்''

ரொதோல் : கடவுளே—இது என்ன எனக்குப் புரிய வில்லையே.

கத்தேரினா : இது எவரெழுத்தென்று எனக்குத்தெரியும். இவன் என்னைக் காதலித்தான். வேனீஸில் என்னைப் பார்க்கவிரும்பினான். இவனை அடித்துத் துரத்தி னேன் நான்— இவன் யார் தெரியுமா? இவன் தான் ஒற்றன் ஓமோதேய்.

ரொதோல் : யார் அது?

கத்தேரி : இவனா—வேனீஸ் பதின்மர் குழுவின் ஒற்றன்

ரொதோல் : ஐய்யோ— கடவுளே.

கத்தேரினா : தீர்ந்தது. நமக்காக வலைவிரிக்கப்பட்டது. நாம் இனித் தப்ப முடியாது.

ரொதோல் : என்ன?

கத்தேரினா : இந்த விளக்கை அணைத்துவிடு.

ரொதோல் : ஏன் எதற்காக?

கத்தேரினா : மொலினோ பாலத்தின் வழி—ஏதோ வெளிச்சம் தெரிகிறது நான் பார்த்தேன்.

ரொதோல் : என்ன நீ சொல்கிறாய்?

கத்தேரினா : அந்த வழியில் விளக்கை நான் பார்த்தேன்.
ரொதோல் : உன் அழிவுக்கு—பாவி—நானல்லவா அடிப்படை.

கத்தேரினா : நீ வரவில்லையென்றால்—நான் உன்னைத் தேடி வந்திருப்பேன்.

கத்தேரினா : (சிறு கதவில் காதை வைத்து) பேசாதே—ஏதோ சத்தம் கேட்கிறது—ஆம் இந்தக் கதவைத் திறக்கிறார்கள்—இரு—பேசாதிரு.

ரொதோல் : இந்தக் கதவா?

கத்தேரினா : ஆம்.

ரொதோல் : ஐய்யோ! என்ன செய்வது சன்னலால் பாயட்டுமா?

கத்தேரினா : வேண்டாம். கீழே ஆறு.

ரொதோல் : இந்தக் கதவு.

கத்தேரினா : என் பூஜை அறை - சரி—அதிலே நுழைந்து கொள் (கதவைத் திறக்கிறாள் - ரொதோல்போ - நுழைகிறான் - கதவை மீண்டும் அவள் மூடுகிறாள் - சாவியை எடுத்துத் தன் மார்பில் மறைத்துக் கொள் கிறாள்).

கத்தேரினா : யாரோ நடக்கிறார்கள் - நிற்கிறார்கள் - என்ன நடக்கிறது என்று கவனிக்கிறார்கள். ஐயோ கடவுளே - இது என்ன இது? ஊம் - சரி - தூங்குவதைப் போல் நடிப்போம் - வருபவர்களை நான் பார்க்கக் கூடாது. (கட்டிலில் படுத்துத் தூங்குகின்றவளைப் போல பாசாங்கு செய்கிறாள். கட்டிலில் சீலைகளைத் தொங்கவிடுகிறாள். கதவு திறக்கிறது).

காட்சி—5

கத்தேரினா—தீஸ்ப

(தீஸ்ப் விளக்கோடு உள் நுழைகிறாள். திரும்பித் திருப்பிப் பார்த்துக் கொண்டே மெல்ல நடந்து வருகிறாள். மேஜையின் மேல் இப்பொழுதுதான் நிறுத்திய விளக்கைப் பார்க்கிறாள்)

தீஸ்ப் : ஊம். விளக்கு இன்னும் புகைகிறது.

(திரும்பிக் கட்டிலைப் பார்க்கிறாள். கட்டிலினருகில் சென்று சீலையை விலக்குகிறாள்.) அவள் தனியாகத் தான் இருக்கிறாள்! தூங்குவதாகப் பாசாங்கு செய் கிறாள்.

(அறையில் அங்குமிங்கும் சுற்றிப் பார்த்து)
இது அவள் கணவன் அறை!
(மூடியிருக்கிற மற்றொரு அறையைப் பார்த்து)
இங்குக்கூட ஒரு கதவு இருக்கிறதோ!
(கத்தேரினா எழுந்து உட்கார்ந்து என்ன செய்கிறாள் என்பதைக் கவனிக்கிறாள்)

கத்தேரினா : இது என்ன இது?

தீஸ்ப் : இதுவா - இது சர்வாதிகாரியின் வெள்ளாட்டி சர்வாதிகாரியின் மனைவியின் திருட்டை விளக்கு கிறாள்; அவ்வளவுதான்.

கத்தேரினா : கடவுளே!

தீஸ்ப் : என்ன என்றா கேட்கிறீர்கள். ஒரு நாடோடி நாடகக் கணிகை - பணத்திற்காகத் தன் கலையை உடலை விற்கும் பேய் என்றெல்லாம் நீங்கள் என்னை நினைக்கலாம் - கூறலாம். அந்த உதவாக்கரை யினிடத்தில்தான் பெரிய சீமாட்டி - மணமானவள் மற்றவர்கள் மதிப்பிற்குரியவள். பேரும்; புகழும்

உடையவள் சிக்கிக் கொண்டாள். அந்த ஒழுக்கமற்ற வளிடத்தில் - அவள் கைகளில் - அவள் கூரிய நகத்திற்கிடையில் - பெரிய இடத்துப் பெண் - செல்வத்திலே புரண்டு செல்வத்திலே வளர்ந்தவள் சீரும், சிறப்புமுடைய ராணி - அகப்பட்டுக் கொண்டாள். அந்தப் பேதை அவளை - துண்டு துண்டாகப் பிய்க்கவோ - சாவடிக்கவோ முடியும் - பெரிய இடத்துப் பெண்களாம்—ஆம் பெரிய இடத்துப் பெண்களெல்லாம் இப்படித்தான் வெளிக்குப் பெரிய இடம் - உள்ளே நாற்றம் வீசும் சேற்றுக்குட்டைகள் - மற்றவர் கண்களுக்கு எதுவும் தெரியாதென்பது அவர்கள் நினைப்பு - பணமும் புகழும் செல்வாக்கும் - தங்கள் அடாதசெயலை -ஒழுங்கீனத்தை மறைத்துவிடுமென்று மனப்பால் குடிக்கிறார்கள் - நானா விடுபவள். என் காலின் கீழ் ஒருத்தி அகப்பட்டுகொண்டாள் ஒன்றும் தெரியாதவள் போல நடிக்கிறாள்.ஊம் - ராணியம்மா உங்களுக்கு எங்கிருந்துதான் இவ்வளவு மனவுறுதி வந்ததோ தெரியவில்லையே - கள்ளக் காதலனை இங்கே மறைத்து வைத்துக்கொண்டு ஒன்றும் தெரியாதவர்களைப் போல பேசுகின்றீரே - உங்கள் ஆணையைக் கொண்டு என்னை விரட்டி விடலாமென்று நினைக்கிறீர்களோ? ஊம் முடியாது — என்னை ஏய்க்க முடியாதம்மா, முடியாது.

கத்தேரினா : என்னம்மா, இது?

தீஸ்ப் : மறைத்துவிட்டீர்களா?

கத்தேரினா : நீங்கள் ஏமாற்றப்பட்டீர்கள்.

தீஸ்ப் : நானா? ஏன் பொய் சொல்லுகிறீர்கள். இங்கு இருந்தானே—அதோ நீங்கள் இருவரும் இருந்ததை அந்த நாற்காலிகள் இன்னும் கூறுகின்றனவே! ஏன் மறைக்கிறீர்கள். பெரிய இடத்திலெல்லாம் உண்மையைக் காணமுடியாது போல் இருக்கிறது; என்ன

என்ன பேசிக்கொண்டிருந்தீர்கள். இன்பமாக—இனிமையாக—ஆசை மீற பேசி இருப்பீர்கள். நான் உன்னைக் காதலிக்கிறேன். என் உள்ளக் கடவுள் நீ! நான் உனக்கு. நீ எனக்கு. வாழ்வுநீ—வளம் நீ. வற்றாப்பொய்கை நீ—வான்மதி நீ—கடலலை நான்—தென்றற்காற்று நீ—செவ்விதழ் நான்—இப்படிப் பலப் பல பேசி இருப்பீர்கள். இல்லையா—என்னைத் தொடாதீர்கள்.

கத்தேரினா : எனக்கொன்றும் விளங்கவில்லையே.

தீஸ்ப் : அம்மா—ராணியம்மா. உடலை விற்கும் எங்கள் இனத்தைவிட கீழ்த் தரமாகவல்லவா, நீங்கள் இருக்கிறீர்கள். காசுக்காக நாங்கள் எங்கும் எவர் முன்பும் பகலில் ஒரு மனிதனிடம் உரத்துச் சொல்லு கின்ற சொற்கள். நீங்கள் இரவிலே வெட்கமின்றி ஆசை நாயகனோடு முணுமுணுக்கிறீர்கள். என்ன வேற்றுமை நமக்குள் இருக்கிறது, நாங்கள் பகலில்—நீங்கள் இரவில். காலம்தான் வேற்றுமை. செய்கை யல்ல உங்கள் மணவாளர்களை வெளிப்படையாக நாங்கள் காசுக்காக கவர்கிறோம். நீங்கள் காதலுக் காக—களியாட்டத்திற்காக எங்கள் காதலரை மறை வாகத் திருடுகிறீர்கள். தன்னலம், ஏமாற்றம், ஒழுங்கின்மை, ஒழுக்கக்கேடு, சீ நீங்கள் ஒரு பெண் பிறப்பா. நாங்கள் யாரையும் ஏமாற்ற மாட்டோமே. நீங்கள், தாயை, தந்தையை, கட்டிய கணவனை—உலகத்தை, கூடுமானால் கடவுளைக்கூட ஏமாற்று கிறீர்களே. பெரிய இடமாம். அரச குடும்பமாம். வெளியிலே பார்! அரசகுடும்பத்துப் பெரிய இடத்துப் பெண்கள். தங்களை மறைத்துக்கொண்டு கோவிலுக் குப் போகிறார்கள். ஒதுங்குங்கள்—வழிவிடுங்கள். எவ்வளவு மரியாதை—அவர்கள் தங்களை மூடிக் கொண்டிருக்கும் போர்வைத் துணியை விலக்கிப் பார்த்தாலல்லவா தெரியும்—போர்வைக்கிடையிலே

ஒரு ஆள்—சீ வெட்கக்கேடு. நான் சர்வாதிகாரியின் ஆசை நாயகி வெள்ளாட்டி. நீங்கள் அவர் மனைவி உங்களை அம்பலப்படுத்தி விடுகிறேன்.

கத்தேரினா : ஐயோ கடவுளே—என்ன இது...

தீஸ்ப் : எங்கே அவன்?

கத்தேரினா : யார்?

தீஸ்ப் : அவன்தான்—உன் ஆசை நாயகன்.

கத்தேரினா : நான் தனியாகவே இருக்கிறேன். இங்கு வேறு யாருமில்லை. உண்மையாகச் சொல்கிறேன். நான் தனியாகவே இருக்கிறேன். நீங்கள் என்ன சொல்லுகிறீர்கள் என்பதே விளங்கவில்லை. நீங்கள் யார்—ஐய்யோ ஏதேதோ பேசுகிறீர்களே. நான் உங்களுக்கு என்ன கெடுதல் செய்தேன்? இவ்வளவு கோபமாக—ஆத்திரப்பட்டுப் பேசுகிறீர்களே. அதனால் வரப்போகும் நன்மைதான் என்ன?

தீஸ்ப் : நன்மையா? நன்மை உண்டு. உங்களுக்கு அதில் ஐயமா—பெரிய இடத்தார்—பக்திமான்கள்—இவர்கள் பேச்சை நம்பமுடியாது. பொய்யும் புளுகும்தான் அவர்கள் வாயில் வரும். நன்மை இல்லாமலா இவ்வளவு ஆத்திரப்படுகிறேன். நீங்கள் ராணி—நான் நாடோடி. எனக்கென்ன அதைப்பற்றி பயமில்லை. எங்கே அந்த மனிதன் காட்டு. இது மிகக் கேவல மானது. ஏதோ ஒன்றுமறியாதவர்கள் போலஇன்னும் நடிக்கிறீர்களே.

கத்தேரினா : ஐய்யோ - கடவுளே—இது என்ன இது... கடவுள்மேல் ஆணையாகச் சொல்கிறேன் என்னை நீங்கள்... -

தீஸ்ப் : எனக்குத்தெரியும் - இங்கே ஒரு கதவு இருக்கிறு தென்று, நிச்சயமாக அவன் அங்கேதான்__

கத்தேரினா : அது என் பூஜை அறை — வேறொன்று மில்லை. அங்கு யாருமில்லை. சத்தியமாகச் சொல்லு கிறேன். அங்கு யாருமில்லை. என் விரோதிகள் யாரோ உங்களை ஏமாற்றிவிட்டார்கள். நான் தனியாக மற்றவர் கண்களுக்குத் தென்படாமல் மறைந்து வாழ்கிறேன் இது உங்களுக்குத் தெரியாதா?

தீஸ்ப் : அதோ....

கத்தேரினா : சத்தியமாகச் சொல்கிறேன். அது என் பூஜைஅறை, கடவுள் வழிபாட்டுப் புத்தகங்களும் கடவுள் சிலைகளும்தானே அங்கு இருக்கின்றன.

தீஸ்ப் : தெரியும்...எங்கே அவன்? சொல்.

கத்தேரினா : சத்தியமாக இங்கு யாரும் மறைந்து கொண்டு இருக்கவில்லை. என்னை நம்புங்கள்.

தீஸ்ப் : வாய்தான் பொய் சொல்லுகிறது.

கத்தேரினா : ஐய்யோ

தீஸ்ப் : எதற்காக இன்னும் பயித்தியக்காரத்தன மாக பொய் சொல்லுகிறீர்கள். அதோ உங்கள் உள்ளத்தை—குற்றம் நிறைந்த உள்ளத்தைப் பயந்த உள்ளத்தை உங்கள் தோற்றம் விளக்கிக் காட்டுகிறது. நீங்கள் இன்னும் மறைக்கப் பார்க்கிறீர்கள். இல்லை என்பதை உண்மையானால் கூச்சலிடுங்கள். கோபப் படுங்கள். குற்றமற்றவர்களாயிற்றே எதோ நடக் கட்டும் பார்ப்போம்.

(கீழே விழுந்துகிடந்த போர்வையைப் பார்க்கிறாள். ஓடிஎடுக்கிறாள்). ஊம் பார்த்தீர்களா—இதோ அவன் போர்வை இப்பொழுது என்ன சொல்லுகிறீர்கள்.

கத்தேரினா : கடவுளே!

தீஸ்ப் : ''இதுபோர்வை அல்ல.' வந்த மனிதனின் போர்வை அல்ல'' ஏன் அப்படித்தானே சொல்வீர்

கள். வேண்டுமானால் இது என் வேலைக்காரியி னுடைய போர்வை என்றுகூடச் சொல்லித் தப்பித்துக் கொள்வீர். அதுதானே-நீங்கள் சொல்லப் போவதற்கு முன் நான் சொல்லுகிறேன். ஏன் அப்படித்தானே?

கத்தேரினா : நீங்கள் என்ன சொல்லுகிறீர்கள் என்று எனக்கு விளங்கவில்லையே.

தீஸ்ப் : உங்கள் பூஜை அறைதானே அது? சரி நல்லது கதவைத் திறவுங்கள்.

கத்தேரினா : ஏன்?

தீஸ்ப் : நான் கடவுளை வணங்கப்போகிறேன். திறந்து விடுங்கள்.

கத்தேரினா: சாவி என்னிடம் இல்லை—இழந்துவிட்டேன்.

தீஸ்ப் : திறந்துவிடுங்கள்.

கத்தேரினா : சாவி இல்லையே....

தீஸ்ப் : உங்களிடம் இல்லை. உங்கள் கணவரிடம் இருக்கிறது. சர்வாதிகாரியவர்களே! சர்வாதிகாரி யவர்களே! (சர்வாதிகாரியின் படுக்கை அறையை நோக்கி ஓடுகிறாள். கத்தேரினா அவள்முன் சென்று வழிமறிக்கிறாள்.)

கத்தேரினா : வேண்டாம்! வேண்டாம். அந்தக் கதவி னருகில் போகவேண்டாம். நான் உங்களுக்கு எந்தத் தீங்கும் செய்யவில்லையே. என் தலைக்குத் தீம்பு தேடுகிறீர்களே. என்மீது உங்களுக்கு ஏதோ கொடூரம் இருப்பதாக வல்லவோ தோன்றுகிறது. இருங்கள்— சற்று என்மீது இரக்கம் காட்டுங்கள். ஐயோ! போகிறீர்களே—சற்றுப் பொறுங்கள். ஒரே ஒரு வினாடி. நான் உங்களுக்கு விளக்கிக் கூறுகிறேன். நீங்கள் இங்கு வந்ததுமுதல் நான் மருண்டு விட்டேன். ஏதேதோ சற்றுக் கண்டிப்பான சொற்கள் கூறி

விட்டேன். இருங்கள். சற்றுப்பொறுங்கள். எனக்கு ஒன்றுமே புரிய வில்லையே நீங்கள் ஒரு நடனப் பெண்ணா—எனக்கு உங்களைத் தெரியாதே. சத்திய மாகச் சொல்லுகிறேன். இங்கு யாரும் இல்லை. என்னை நம்புங்கள். ஆம் அந்தத் துப்பறிபவன்தான் இதற்கெல்லாம் காரணம். அந்தக் கொடியவன் உங்களை ஏமாற்றிவிட்டான், அவன் பேச்சை நீங்கள் கேட்கலாமா? சற்றுப்பொறுங்கள். நான் ஒரு பெண்ணல்லவா? பெண்ணுக்குப் பெண் இரக்கங் காட்டக் கூடாதா? ஒரு பெண்ணாக இருந்தால் எனக்கு இரக்கங்காட்டத் தவறமாட்டார்களே. பெண்மைக்காகவாகிலும் சற்றுப் பொறுங்கள்! இவ்வளவு அழகு உங்களுக்கு இருந்தும் இரக்க மில்லையே. நான் சொல்வதைக் கேளுங்கள். அந்தத் துப்பறிபவன், அந்த ஈவுஇரக்கமற்ற கொடியவன், வஞ்சகன். நான் சொல்வதைக் கேட்டபிறகு என் சாவுக்குக் காரணமாக இருந்த உங்களையே நீங்கள் நொந்துகொள்வீர்கள். என் மணாளரை எழுப்பாதீர்கள். என்னைச் சாவடித்து விடுவார்கள். என் நிலைமையை உணர்ந்தால் நீங்களே வருந்து வீர்கள். நான் குற்றவாளியல்ல. உண்மையை உண்மை யாகக் கூறுகிறேன். ஏதாவது துடுக்குத்தனம் செய்திருக்கலாமே ஒழிய நான் குற்றவாளியல்ல—நான் தாயற்றவள். தாயற்ற என்மீது சற்று இரக்கங் காட்டுங்கள். அந்தக் கதவினருகில் போகவேண்டாம். உங்களை வேண்டிக்கொள்கிறேன். போகவேண்டாம்.

தீஸ்ப் : முடியாது. ஊகும் முடியாது. உன் வேண்டு கோளை என் செவி ஏற்காது, கோமானே! கோமானே!

கத்தேரினா : கூச்சலிடாதீர்கள்—கடவுளே— வேண்டாம் அவர் என்னைக் கொன்றுவிடுவார். ஒரே ஒரு வினாடி கடவுளை வேண்டிக்கொள்வதற்காகிலும் ஒரு சிறு

வினாடி பொறுங்கள். நான் ஓடிவிடமாட்டேன். அதோ அந்தச் சிலுவையின் முன் மண்டியிட ஒரே ஒரு வினாடி அருள்கூறுங்கள். (சுவற்றில் மாட்டப் பட்டிருந்த பித்தளைச் சிலுவையைக் காட்டுகிறாள்). இதோ இந்தச் சிலுவையின்முன் தயவுசெய்யுங்கள்

(தீஸ்பின் கண்கள் அந்தச் சிலுவையில் பதிகின்றன)

என்னசொல்லுகிறீர்கள் ஒரே ஒரு வினாடி எனக்குக் கொடுங்கள் -என்மேல் நம்பிக்கை இல்லையென்றால் என் அருகிலேயே இருங்கள். என்னசொல்லுகிறீர்கள்? நான் சாகத்தான்வேண்டுமென்பது உங்கள் முடிவாக இருந்தால் நான் சாகிறேன். ஒரே ஒரு வினாடி— வணங்குவதற்காக இந்த ஒரு வினாடி.

(தீஸ்ப் விரைந்து அந்தச் சிலுவையைச் சுவற்றிலிருந்து எடுக்கிறாள்.)

தீஸ்ப் : இது என்ன சிலுவை இது. இந்தச் சிலுவை உங்களுக்கு எப்படிக் கிடைத்தது. இதைக் கொடுத்தது யார்? எப்பொழுதிருந்து நீங்கள் இதை வைத்திருக் கிறீர்கள்?

கத்தேரினா : என்ன? இந்தச் சிலுவையா? இதைப்பற்றி நீங்கள் தெரிந்துகொள்வதால் ஏற்படப்போவதென்ன?

தீஸ்ப் : இது எப்படி உங்களுக்குக் கிடைத்தது? சொல்லுங் கள். உடனே சொல்லுங்கள். (தீஸ்ப் எடுத்துவந்த விளக்கு எரிந்துகொண்டே இருந்தது. அந்த விளக்கின் அருகில் சிலுவையை எடுத்துக்கொண்டு போய்த் திருப்பித்திருப்பிப் பார்க்கிறாள். கத்தேரினா அதைக் கவனிக்கிறாள்)

கத்தேரினா : இதுவா- இது ஒரு கிழவி கொடுத்தாள்? அதிலே இருக்கிற அந்தப் பெயர் ''தீஸ்ப்'' எனக்கு அந்தப் பெயர் என்ன என்பதே தெரியாது. அந்த

ஏழைக் கிழவியைப் பிரேசியாவில் தூக்கிலிடக் கட்டி இழுத்துப் போனார்கள். அப்பொழுது நான் சிறுமியாக இருந்தேன். என் தந்தையே அந்தக் கிழவிக்குத் தூக்குத் தண்டனை இட்டவர். அழுது கெஞ்சி அவளை மன்னிக்கும்படி வேண்டினேன். தந்தையாக இருந்ததால், என் அழுகையைக்கண்டு அவளை மன்னித்து விட்டார். அவள் உயிர் மீண்டது. அம்மா உங்களைக் கெஞ்சுகிறேன். என்னைக் காட்டிக் கொடுக்க வேண்டாம். அவர் என்னைக் கொன்றுவிடுவார். தயவு செய்யுங்கள். அந்தக் கிழவி—தூக்குத்தண்டனையிலிருந்து என்னால் தப்பித்துவிடப்பட்ட கிழவி இந்த சிலுவையை எனக்குக் கொடுத்து ''இது உனக்கு நன்மைசெய்யும்'' என்றாள். இதுதான் உண்மை. சத்தியமாகச் சொல்லுகிறேன். இந்தச் சிலுவையைப் பற்றிய செய்தி இவ்வளவுதான். இதை நீங்கள் தெரிந்துகொள்வதால் என்னபயன்? தீர்ந்தது என் வாழ்வு...

தீஸ்ப் : (தனக்குள்ளே) கடவுளே! என் தாய்! (கதவு திறக்கப்படுகிறது—ஆன்ழெல்லோ படுக்கை உடையோடு வருகிறார்)

கத்தேரினா : (அரங்கின் முன் வந்து)என் கணவன் -நான் செத்தேன்!

## காட்சி—6

கத்தேரினா - தீஸ்ப் - ஆன்ழெல்லோ

ஆன்ழெல்லோ : (தீஸ்பைக் கவனியாது) என்ன இது? நீண்ட நேரமாக இங்கு ஏதோ இரைச்சல் கேட்டதே!

கத்தேரினா : ஊம்.

ஆன்ழெல் : இந்த நேரம் வரையிலுமா நீ இன்னும் உறங்காமல் விழித்துக் கொண்டிருக்கிறாய்?

கத்தேரினா : சத்தம் ஒன்...

ஆன்மெழல் : என்ன ஒரே கலக்கம் தோன்றுகிறது. உன் முகத்தில்? உடல் நடுங்குகிறதே. இங்கு யாரோ இருக்கிறார்கள் போல் தோன்றுகிறது.

(தீஸ்ப் அரங்கினுள் இருந்து வந்து)

ஆம் கோமானே! ஆம். நான் தான் இங்கு இருக்கிறேன்.

ஆன்மெழல் : தீஸ்ப் - நீயா?

தீஸ்ப் : ஆம். நான்தான்.

ஆன்மெழல் : நீயா? இந்த நடுச்சாமத்திலா? எப்படி எதற்காக வந்தாய்? ராணி ஒரே கலக்கமாக.

தீஸ்ப் : ஆம் ராணி கலக்கமாக இருக்கிறார்களா? சொல்லுகிறேன். நான்தான் அந்தக் கலக்கத்திற்குக் காரணம். அது மிக முதன்மையான - பயங்கரமான செய்தி - கேளுங்கள்.

கத்தேரினா : (தனியாக) ஊம் தீர்ந்தது என் வாழ்வு.

தீஸ்ப் : நாளை காலையில் நீங்கள் கொலை செய்யப்பட ஏற்பாடாகி இருக்கிறது.

ஆன்மெழல் : நானா?

தீஸ்ப் : ஆம். உங்கள் கோட்டையிலிருந்து என் மாளிகைக்கு வரும் பொழுது நீங்கள் தனியாகத் தானே வருவது வழக்கம். இந்த இரவு எனக்குச் செய்தி கிடைத்தது. உடனே இருட்டையும் நேரத்தையும் பார்க்காமல் ஓடோடி வந்தேன். ராணியினிடத்தில் செய்தியைச் சொல்லி உங்களைக் காலையில் வெளிக் கிளம்பாதவாறு ஏற்பாடு செய்யச் சொன்னேன். அதுதான் ராணியின் கலக்கத்திற்குக் காரணம்.

கத்தேரினா : கடவுளே என்ன இது? இந்தப் பெண்!

ஆன்மெழல் : உண்மையாகவா—பார்த்தாயா. நான்—முன்னரே உன்னிடம் சொல்லவில்லையா - ''என் வாழ்வு பல வசதிகள் இருந்தும் பயங்கரமானது. நாளை உயிரோடிருப்பேனா என்பது எனக்கே தெரியாது'' என்றெல்லாம் உன்னிடம் கூறினேனே. நீயே தெரிந்துகொள். இந்தச் செய்தியை உனக்கு யார் சொன்னது?

தீஸ்ப் : அறிமுகமில்லாத ஒருவன் இதைச் சொல்லித் தன்னைக் காட்டிக் கொடுக்கக் கூடாது என்றும் கேட்டுக் கொண்டான். சரியென்று அவனை அனுப்பி விட்டேன்.

ஆன்மெழல் : தவறிவிட்டாய். சரியென்று சொல்லி அவனைப் பிடித்துக் கொண்டல்லவா இருக்க வேண்டும். நீ எப்படி கோட்டையின் உள்ளே நுழைந்தாய்.

தீஸ்ப் : அந்த மனிதன் என்னை அழைத்து வந்தான். மொலினோ பாலத்தினருகிலிருக்கிற சிறிய கதவைத் திறந்து கொண்டு வந்தோம்,

ஆன்மெழல் : இங்கெல்லாம் எப்படி வந்தீர்கள்?

தீஸ்ப் : நீங்கள் கொடுத்த அந்த வேலைப்பாடமைந்த சாவியைக் கொண்டுதான்.

ஆன்மெழல் : இந்த அறைக் கதவுகளைத் திறக்கலாம் என்றெல்லாம் உன்னிடம் சொன்னதாக நினைவில்லையே

தீஸ்ப் : நீங்கள்தானே நேற்றுச் சொன்னீர்கள். இந்தச் சாவியைக் கொண்டு இந்த அறை வரையில் திறக்கலாமென்று.

ஆன்மெழல் : (அங்கிருந்த போர்வையைப் பார்த்துவிட்டு) இது என்ன இந்தப் போர்வை?

தீஸ்ப் : இங்கு வருவதற்காக அந்த மனிதன் இந்தப் போர்வையைக் கொடுத்தான். இன்னும் ஏதோகூட

எடுத்து வந்தேன். இங்குதான் எங்கோ வைத்து விட்டேன்.

ஆன்ழெல் : இதுபோன்ற மனிதர்கள் நினைத்தபோ தெல்லாம் என் கோட்டையில் நுழைகிறார்கள். என் வாழ்க்கையைப் பார்த்தாயா? வாழ்க்கை சர்வாதி காரி வாழ்க்கை.-அரச வாழ்க்கை - எப்பொழுதும் என்னை வீழ்த்த வலை விரிக்கப்படுகிறது.

தீஸ்ப் : நேரமாகிவிட்டது, மற்றவை எல்லாம் நாளைக்குப் பேசிக்கொள்ளலாம், நீங்கள் போய் படுங்கள். உயிர் தப்பித்தது - அது போதும் எனக்கும் ராணிக்கும் நீங்கள் மிகக் கடமைப்பட்டவர்கள்.

ஆன்ழெல் : ஆம் கண்ணே, என் உயிரைமீட்ட உனக்குத் தான் முதலில்...

தீஸ்ப் : என் வண்டி எனக்காக காத்திருக்கிறது. சற்று அதுவரையில் வருகிறீர்களா? ராணி தூங்கட்டும்.

ஆன்ழெல் : சரி-போவோம். என் அறைக்குச் சென்று போவோம். என் உடை வாளை எடுத்துக்கொண்டு போவோம். (அறையினுள் நுழைந்து) யாரங்கே விளக்குகளை ஏற்றுங்கள்.

தீஸ்ப் : (கத்தேரினாவை அரங்கின் ஓரத்தில் அழைத்து வந்து) இதோ சாவி-நான் வந்த வழி-அவனை உடனே தப்பித்து ஓடச் செய்யுங்கள்.

(பூஜை அறைப் பக்கம் திரும்பி)

அவன்தானா என்ற உண்மையைத் தெரிந்துகொள்ள முடியவில்லையே!

ஆன்ழெல் : (திரும்பி வந்து) சரி! போவோமா!

தீஸ்ப் : அவனைப் பார்க்கக்கூடுமானால்! வழியில்லை போகவேண்டியதுதான். ஊம்... (ஆன்ழெல்லோ பக்கம் திரும்பி)

கோமானே! போவோம் வாருங்கள்.

கத்தேரினா : (அவர்கள் போவதைப் பார்த்துக் கொண்டே) இது என்ன கனவா!

## களம்— 3

### மூன்றாம் நாள்

காட்சி— 1

(கத்தேரினாவின் அறை - கட்டிலின்மேல் பட்டுச் சீலைகள் கட்டிலை மறைத்துக் கொண்டு தொங்கு கின்றன).

ஆன்மெழல்லோ — இரண்டு பாதிரிகள்

ஆன்மெழல் : (இருபாதிரிகளில் ஒருவரைப் பார்த்து) பது நகர சய்ன்த் அன்துவான் மாதாக்கோயில் பாதிரி அவர்களே கோயில் எங்கும் கறுப்புச் சீலைகள் தொங்கவிட ஏற்பாடு செய்யுங்கள் - உடனே இரண்டு மணிக்கெல்லாம் தொங்கவிடப்படட்டும். ஒரு பிரபல ஆன்மா அமைதியடையப்போகிறது. அதற்கு வேண்டிய பூஜை முறைகள் தயார் ஆகட்டும். ராணி யின்சாவுக்கு ஏற்றப்படுவதைப் போல முன்னூறு விளக்குகள் ஏற்றுங்கள். அறுநூறு ஏழைகளுக்குத் தலை ஒன்றுக்கு ஒரு பொன் நாணயமும், ஐந்து ஆறு பிரான்க் மதிப்புள்ள ஒரு வெள்ளி நாணயமும் வழங்குங்கள். சீலையில் எல்லாம் மலிப்பியரி ஆன்மெழல்லோலின் குடும்பச் சின்னங்களும் பிரக தானி (அவர் மனைவி கத்தேரினா குடும்பப் பெயர் சின்னங்களும் இருக்கவேண்டும்.

பாதிரி : அப்படியே ஆகட்டும் - செய்கிறேன்.

ஆன்மெழல் : உடனே உங்கள் கூட்டத்தோடு நம் கோட்டையிலிருக்கிற கல்லறைக்குச் செல்லுங்கள். அங்கே இதற்குமுன் ஆண்ட ரொமோனா கல்லறைகள் இருக்கின்றன. அதில் ஒரு கல்லை எடுத்துக் குழி தோண்டப்பட்டிருக்கிறது. அந்தக் குழியை ஆசிர்வதியுங்கள். ஆகட்டும். நேரத்தைப் போக்கவேண்டாம். ஊம் விரைவில் நடக்கட்டும்.

பாதிரி : உங்கள் உறவினருள் யாராவது ஒருவரோ மன்னரே!

ஆன்மெழல் : போங்கள்—நான் சொன்னபடி யாவும் நடக்கட்டும்.

(பாதிரி வணங்கிவிட்டுப் போகிறார்—ஆன்மெழல்லோ மற்றொரு பாதிரியை நிறுத்திக்கொண்டு)
சாமி— நீங்கள் இருங்கள்—அவர் போகட்டும்.
இங்கே இந்தப் பூஜை அறையில் ஒருவருக்கு அவஸ்தை (சாவுமுன் செய்கிற சடங்கு) கொடுக்கவேண்டும்.

பாதிரி : தண்டிக்கப்பட்ட மனிதனா— மன்னரே!

ஆன்மெழல் : ஒரு பெண்.

பாதிரி : அந்தப் பெண்ணைச் சாவ ஏற்பாடு (அவஸ்தை கொடுத்தல்) செய்யவேண்டுமா?

ஆன்மெழல் : இதோ நான் உங்களை அழைத்துப் போகிறேன்.

(ஒரு வேலைக்காரன் உள்ளேவந்து) அரசர் தீஸ்பை அழைத்தார்களாமே—அதோ அவர்கள் வந்துள்ளனர்.

ஆன்மெழல் : வரச்சொல்— இங்கேயே இருக்கட்டும்— இதோ வந்துவிடுகிறேன்.

(வேலைக்காரன் போகிறான். ஆன்மெழல்லோ பாதிரியாரை பூஜை அறையில் அழைத்துக் கொண்டு போய் விட்டு அவரைச் சற்று வாயிற்படியில் நிறுத்தி—

சாமிகாள்—இங்கு நீங்கள் யாருக்கு அவஸ்த்தை கொடுக்கப்போகிறீர்கள் என்பதை யாராக இருந்தாலும் சரி நீங்கள் வெளியிடக்கூடாது. தப்பித்தவறி வாய்திறந்தால், தலை உருளும்—நினைவிருக்கட்டும். ஊம்! போங்கள்.

(இருவரும் பூஜை அறையில் நுழைகிறார்கள். வேலைக்காரன் தீஸ்பை அழைத்துவருகிறான்.)

தீஸ்ப் : (வேலைக்காரனைப் பார்த்து) எதற்காக அரசர் என்னைத்தேடுகிறார் தெரியுமா?

வேலைக் : எனக்குத் தெரியாது அம்மா. (வேலைக்காரன் போகிறான்)

## காட்சி—2

தீஸ்ப்—தனியாக

அட இந்த அறையா! மீண்டுமா இந்த அறையை நான் பார்க்கவேண்டும். கோட்டையே ஒருமாதிரி சாவீடு போலல்லவா இருக்கிறது. சர்வாதிகாரி எதற்காக என்னை அழைத்தார். சரி நமக்கென்ன அதைப்பற்றி—சீ—இந்தக் கதவைப் பார்க்கவே எனக்கு வெறுப்பாக இருக்கிறது. இந்தக் கதவின்பின்தானே அவன் ஒளிந்திருந்தான்—அவனா—வேறு யாராவதா? உண்மை எனக்கு விளங்கவில்லையே! அந்தத் துப்பறிபவனை நான் அதற்குப் பிறகு பார்க்க முடியவில்லை. இது என்ன எனக்கு ஒரே குழப்பமாக இருக்கிறது. ரொதோல்போதானா அன்று இந்த அறையில் இருந்தவன். என் உயிராக—ஒளியாக— வாழ்வாக எண்ணி எண்ணி ஏங்கும் அந்த ரொதோல்போவா—அப்படியானால் நான் உண்மையைச் சர்வாதிகாரியிடத்தில் கூறி விடவேண்டியதுதான். ஆம் அப்படித்தான் அவர்களைப் பழி வாங்கவேண்டும். இல்லை என்றால் என் மனம் அமைதி

அடையாது. ரொதோல்போ என்னைக் காதலிக்க வில்லை. ஆம்—அவன் வேறு பெண்ணைக் காதலிக்கிறான். நான் எதற்காக வாழ்வது, இந்த வாழ்க்கை எனக்கு வேண்டாம். அவனே என்னை வெறுக்கும் போது எனக்கேன் இந்த வாழ்க்கை. ஆம்—நான் இறந்துவிடவேண்டும். அவர்களைப் பழிவாங்கக்கூடாது.

அன்றிரவு வந்து ஒளிந்திருந்தவன் ரொதோல் போதானா? என் உடலுக்குயிர்—விழிக்கு ஒளி அவனா வந்திருந்தான்?— ஐயோ கடவுளே! என்னால் எது உண்மையென்று புரிந்து கொள்ள முடியவில்லையே! உண்மையாக இருந்தால் ஆம் அந்தப் பெண்ணை— ராணியை— சர்வாதிகாரி யின் மனைவியைத் தீர்த்துக் கட்டி விடுவேன்— அவன் மட்டும் என்ன அவனையுந்தான். அவன் என்னைக் காதலிக்கவில்லையென்றால் என்னால் வாழமுடியாது. நான் வாழாதபோது அவன் மட்டும் வாழ்வதா— அவன் காதற் கனி வாழ்வதா? முடியாது— முடியாது, தீர்த்துக் கட்டி விடவேண்டியதுதான். சர்வாதிகாரி வரட்டும்.

இது என்ன எனக்கு ஒரே குழப்பமாக இருக் கிறதே அவர்களா குற்றவாளிகள். என்னை அவன் காதலிக்கவில்லை என்றால் அதற்கு அவனா குற்றவாளி? அவள்தான் என்ன செய் வாள்? பாவம்? சாவப்போவது அவர்களா? நானா? எனக்கொன்றுமே புரியவில்லை.

(ஆன்ஜெல்லோ வருகிறான்)

## காட்சி—3

தீஸ்ப்—ஆன்ஜெல்லோ

தீஸ்ப் : கோமானே! நீங்கள் என்னைத் தேடினீர்களாமே

ஆன்ழெல் : ஆம் தீஸ்ப். நான் உன்னிடம் பேசவேண்டும். முக்கியமான செய்தியைப்பற்றிப் பேசவேண்டும். என் வாழ்வில் ஒவ்வொரு நாளும் எனக்கு வலைவிரிக்கப் படுகிறது. சீ—என் வாழ்வு மிக மோசமானது. எங்கும் எனக்கு ஏமாற்றம். ஒவ்வொரு நாளும் நான் கத்திக்குத்து வாங்கவேண்டும் அல்லது கோடரியால் வெட்டி அமைதி அடையவேண்டும்— ஏன் நீட்டு வானேன்—என் மனைவி என்னை ஏமாற்றிவிட்டாள். அவளுக்குக் கள்ளக்காதலன் ஒருவன் இருக்கிறான்.

தீஸ்ப் : அவன் பெயர்?

ஆன்ழெல் : அன்று இரவு என்னைக் கொலைசெய்ய சதி நடந்திருக்கிறது என்று வந்து எழுப்பிச் சொன்னாயே அப்பொழுதெல்லாம் அந்தக் கள்ளக்காதலன் இங்கு தான் இருந்திருக்கிறான்.

தீஸ்ப் : அவன் பெயர்?

ஆன்ழெல் : இதைக்கேள்-அது எப்படி எனக்குவிளங்குகிறது தெரியுமா? ஒருவன் - பதின்மர் குழு ஒற்றன் ஒருவன். அந்த ஒற்றர்கள் என்னிடம் நேருக்கு நேர் எதையும் சொல்லமாட்டார்கள். சொல்லுவதற்கு அவர்களுக்கு ஆணை கிடையாது. வேனீசுக்குத் தெரிவித்து அங்கிருந்தே எனக்கு அறிவிக்கப்படும். இதுதான் வழக்கம். அந்த ஒற்றர்களிலே ஒருவன் இன்று காலை ஆற்றோரத்தில் கொலையுண்டு கிடந்தான். காவற் காரர்கள் அவனைப் பார்த்தார்கள். எதற்காக, எப்படி அந்தக் கொலை நடந்தது—யாருக்கும் தெரியாது. அவன் உயிர்விடும்போது தன்னிடமிருந்த ஒரு கடிதத்தை என்னிடம் சேர்ப்பிக்கும்படி காவற்காரர் களிடம் கொடுத்தான். அந்தக் கடிதம் என் மனைவிக்கு அவள் கள்ளக்காதலன் எழுதியது.

தீஸ்ப் : அவன் பெயர்?

ஆன்ழெல் : கடிதத்தில் கையெழுத்தில்லை. நீ அவன் பெயரைக் கேட்கிறாய். நானும் அதைத்தான் தேடிக் கொண்டிருக்கிறேன். அந்த ஒற்றன் இறக்கும்போது ஏதோ பெயர் சொன்னானாம். காவற்காரர்கள் அந்த மடையர்கள் மறந்துவிட்டார்கள். ஒருவன்—ரொதேரிழோ என்கிறான். மற்றவன் பான் தொல்போ என்கிறான். அவன் சொல்கிற பெயர் சரியல்ல என்று இவன் சொல்கிறான். இவன் சொல்வது சரியல்ல என்று அவன் சொல்கிறான்.

தீஸ்ப் : அந்தக் கடிதம் உங்களிடம் இருக்கிறதா?

ஆன்ழெல் : இதோ என்னிடம் இருக்கிறது. நீ பார்த்தால் ஒருக்கால் இது யாருடைய எழுத்தென்று சொல்லலா மல்லவா. அதற்காகத்தான் இதோ வைத்திருக்கிறேன். (கடிதத்தை எடுத்து) இதோ.

தீஸ்ப் : காட்டுங்கள்.

ஆன்ழெல்லோ : (ஆன்ழெல்லோ கடிதத்தைக் கோபமாகக் கையில் கசக்கிக்கொண்டே)நான் எந்த நிலையில் இருக்கிறேன்தெரியுமா? மலிப்பியரியின்மனைவி மீதேஒருவன் கண்ணை வைத்துவிட்டான். எவ்வளவு தைரியம் பார்த்தாயா அவனுக்கு. வேனீஸ் பொன்னேட்டில் என் பெயர் பொறிக்கப்பட்ட இடத்தில் மாசையல்லவா உண்டாக்கிவிட்டான் அவன். அவன் தலை இரும்பென்றல்லவா நினைத்துவிட்டான். எவ்வளவு மன உறுதி அவனுக்கு. அந்த இரவு இந்த அறையில் நான் இருக்க வேண்டிய இடத்தில் அவன், புலிக்குகையில் புல்வாய், அரிமா இருக்க வேண்டிய இடத்தில் நரிமா. சர்வாதிகாரியின் அரண்மனையில் அதுவும் அந்தப்புறத்தில் ஒரு சாக்கடைப்புழு. ஊம் என் மனம் கொதிக்கிறது. என் உள்ளமே வெடித்துவிடும்போல் தோன்றுகிறது. இருக்கட்டும். இதே இந்த இடத்தை அவன் குருதியால் கோலமிடாவிட்டால் நான்

ஆன்ழெல்லோ மலிப்பியரியல்ல இதக்கடிதத்தை யார் எழுதினார்கள் என்று சொல்பவருக்கு என் தந்தையின் வாள். என் உயிர், என் வலக்கை. இன்னும் எதுவேண்டுமானாலும் தருவேன்.

தீஸ்ப் : இப்படிக் காட்டுங்களேன், அதைப்பார்ப்போம்.

ஆன்ழெல் : பார்—இந்தா

(தீஸ்ப்—கடிதத்தைப் பிரித்துப்பார்க்கிறாள். தனக்குள்ளே) ரொதோல்போதான்!

ஆன்ழெல் : இது யாருடைய எழுத்தென்று தெரிகிறதா?

தீஸ்ப் : இருங்களேன் நான் படித்துப்பார்க்கிறேன். (அவள் படிக்கிறாள்:)

''கத்தேரினா - என் அன்பே! பார்த்தர்யா கடவுள் நம்மைக் காப்பாற்றினார். அன்றிரவு உன் கணவனிடத்திலிருந்தும் அந்தப் பெண்ணிடத்திலிருந்தும் அவரே நம்மை மீட்டார். இல்லையென்றால் நம் கதி,''

(தனக்குள்ளே—) அந்தப் பெண்!

(மீண்டும் படிக்கிறாள் :)—''என் உயிரே என்னால் காதலிக்கப்பட்ட பொருள் நீ ஒன்றுதான். எனக்காக வருந்தாதே. நான் பாதுகாப்போடே பயமின்றி இருக்கிறேன்—''

ஆன்ழெல் : என்ன தெரிகிறதா? யார் எழுத்து?

தீஸ்ப் : (கடிதத்தை ஆன்ழெல்லோவிடம் கொடுத்து) ஊகும் இது யாரெழுத்தென்று தெரியவில்லை.

ஆன்ழெல் : தெரியவில்லையா? கடிதத்தைப் பற்றி நீ என்ன நினைக்கிறாய்? இக்கடிதத்தை எழுதியவன் இந்தப் பதுவில் சில நாட்களாகத்தான் இருக்கிறான் போல் தோன்றுகிறது. இது பழைய காதலரின்

உள்ளம். நீ எப்படி நினைக்கிறாய். அதில் இருப்பதைக் கொண்டு. நகரம் முழுதும் தேட ஏற்பாடு செய்து விட்டேன். அவன் தப்பிக்கமுடியாது. நீ என்ன சொல்கிறாய் தீஸ்ப்? உன் கருத்தென்ன?

தீஸ்ப் : தேடுங்கள்

ஆன்ஜெல் : நீயும் உன் அண்ணனும் தவிர மற்றவர்கள் யாரும் என் அரண்மனையில் நுழையக் கூடாதென்று உத்திரவிட்டுள்ளேன். வேறுயாராக இருந்தாலும் சிறை செய்து அழைத்துவர உத்திரவு—அதற்குள் அவளை ஒருகை பார்க்கிறேன்.

தீஸ்ப் : என்ன யாரை?

ஆன்ஜெல் : அவளைச் சாவடித்து வஞ்சம் தீர்த்துக் கொள்ளப் போகிறேன்.

தீஸ்ப் : யார் - ராணி - உம் மனைவியையா?

ஆன்ஜெல் : யாவும் ஏற்பாடாகி விட்டது. இன்னும் ஒரு மணி நேரத்திற்குள்—கத்தேரினா பிரகதாணியின் தலைகீழே உருளும்.

தீஸ்ப் : தலையையா வெட்டப்போகிறீர்கள்?

ஆன்ஜெல் : அதே அறையில்.

தீஸ்ப் : அந்தப் பூஜை அறையிலா?

ஆன்ஜெல் : கேள்—மாசுபடிந்த என் கட்டில் பிணக் கட்டிலாகட்டும். அவள் இறக்கவேண்டியதுதான். எந்தக் கண்ணீரும், வேண்டுகோளும் என் முடிவை மாற்ற முடியாது. என் உயிர்த் தோழர்கள் மண்டியிட்டு மன்றாடினால்கூடப் பொறுக்கமாட்டேன். அவள் தலை உருளவேண்டியது தான் தீஸ்ப். நான் அவளை வெறுக்கிறேன். குடும்பக் கட்டாயத்திற்காக நான் அவளை மணந்து கொண்டேன். நான் அப்பொழுது அந்தத் திருமணத்தைப் பற்றி எண்ணிப்

பார்க்கவே எனக்கு நேரமில்லை. அவ்வளவு அரசியல் வேலை இருந்தது. என் பெரியப்பாவின் வலிகட்டாயம். இந்த மூதேவியை மணந்துகொள்ள வேண்டியவனானேன். அவள் முகத்தைப்பார்த்திருக் கிறாயா? எப்பொழுதும் ஏதோ பறிகொடுத்தவள் போலவே இருப்பாள். மலடி - இதுவரையில் ஏதாவது பிள்ளைதான் உண்டா? எங்கள் வெறுப்பி லிருந்து எவரும் தப்பித்தது கிடையாது. எங்கள் இரத்தத்திலே ஊறிவிட்டது அது. என் பாட்டனார் கோமான் அஜோவை வெறுத்தார். கோமான் அஜோ வேனீஸ் கிணற்றிற்கு உணவாக்கப்பட்டார். என் தந்தை பதோயரை வெறுத்தார். வேனீஸ் ராணி இல் விருந்திலேயே விஷமிட்டுக்கொல்லப் பட்டார் பதோயர். நான் இவளை வெறுக்கிறேன். இவள் இனி பிழைக்க முடியாது. என் தாயின் எலும்புகள் இவளுக்காகப் பரிந்து வந்து மன்றாடி மன்னிப்புக் கோரினாலுங்கூட என் தாயின் வேண்டு கோள் மறுக்கப்படும். இவள் சாவாள். அது உறுதி.

தீஸ்ப் : வேனீஸ் அரசாங்கம் உங்களை இதற்கெல்லாம் அனுமதிக்கிறதா?

ஆன்மெழல் : மன்னிப்பதல்ல. தண்டிப்பதுதான் அதன் குறிக்கோள்.

தீஸ்ப் : ஆனால் பிரகதானி குடும்பம் - உம் மனைவியின் குடும்பம்?

ஆன்மெழல் : என்னை வாழ்த்தும்.

தீஸ்ப் : ஊம், முடிவு கட்டிவிட்டீர்கள். அவள் சாவப் போகிறாள். சரி இன்னும் யார் எவர் இறக்கப் போகிறார் என்று தெரியாதிருப்பதாலும் யாவும் மறைவாகவே இருப்பதாலும் எதற்காக அறையை இரத்தமயமாக்கப்போகிறீர்கள் எப்படியாவது இது

மக்களுக்குத் தெரிந்துதானே போகும். வேறு வகையில் இதைச் செய்தால் என்ன? கொலைகாரன் என்றைக்காவது ஒரு நாள் சர்வாதிகாரியின் மனைவி ஏதோ கள்ளக் காதல் புரிந்தாளாம்—அதற்காக அவளைக் கொல்லும்படி ஏற்பாடு செய்யப்பட்டது. நான் கொன்றேன் என்று சொல்லக் கூடுமல்லவா? ஏன் அந்த வீண்தொல்லை. - காதும் காதும் வைத்த மாதிரி வேறு வகையில் நடத்தி விட்டால்...

ஆன்மெழல் : ஆம் நல்லயோசனைதான். - நஞ்சு - மிக நல்லதுதான். அது என்னிடம் இல்லையே.

தீஸ்ப் : என்னிடம் இருக்கிறது.

ஆன்மெழல் : எங்கே?

தீஸ்ப் : என் வீட்டில்.

ஆன்மெழல் : என்ன நஞ்சு?

தீஸ்ப் : கொடிய நஞ்சு - நான் தான் உங்களிடத்தில் முன்பு கூறினேனே? என் நண்பர் எனக்காகப் பரிசு வழங்கிப் பெட்டியில் அனுப்பி வைத்தது வீட்டில் இருக்கிறது—ஒரே ஒரு வினாடி—தீர்ந்துவிடும்.

ஆன்மெழல் : ஆம் அதுதான் சரி - நல்லயோசனை—அது நம்மோடே மறைந்து விடும்; வீண் பேச்சுக்கு இடம் இருக்காது. இதோபார் தீஸ்ப். உன்னைத் தவிர மற்றவர்களின் மேல் எனக்கு நம்பிக்கையில்லை. என் பெயர், புகழ் - நிலை - மானம் - காப்பாற்றப்பட வேண்டுமானால் நீ சொன்னதுதான் நல்ல யோசனை. எப்படி இவள் இறந்தாள் என்பதே யாருக்கும் தெரியாத புதிராக இருக்கும். இந்தச் சாச்சடங்கு யாருக்கு என்பதே இன்னும் மக்களுக்குத் தெரியாது. கோட்டையிலே யாரும் அறியாமல் அடக்கம் செய்து விடலாம். வெளிக்கு ஒன்றும் தெரியாது. ஆம்

அதுதான் சரியான யோசனை - போய் அந்த நஞ்சை எடுத்துவரச் சொல்.

தீஸ்ப் : எனக்குத்தான் அந்த நஞ்சு இருக்குமிடம் தெரியும்; நானே சென்று எடுத்துவருகிறேன்.

ஆன்ழெல் : போ—விரைவில் வந்துவிடு. நேரம் போகக் கூடாது!

(தீஸ்ப் போகிறாள்)

ஆம் அதுதான் சரி. இருட்டோடு இருட்டாக இந்தக் கொலையும் அடங்கிவிடும். (பூசை அறை திறக்கிறது. பாதிரி கையைக் கட்டிக்கொண்டு தலை தாழ்த்தி வெளியே வருகிறார். ஆன்ழெல்லோ அவரைப் பார்த்து) சாகத் தயாராகிவிட்டாளா?

பாதிரி : ஆம் அரசே!

(பாதிரி போகிறார். கத்தேரினா பூஜை அறைக் கதவைஎட்டிப் பார்க்கிறாள் )

## களம்—4

### ஆன்ழெல்லோ—கத்தேரினா

கத்தேரினா : எதற்குத் தயார்?

ஆன்ழெல் : சாவதற்கு.

கத்தேரினா : சாவதா? உண்மையாகவா- மெய்தானா, ஏன்? எதற்காக? ஐயையோ! ஊஹும் மாட்டேன்! வேண்டாம்! வேண்டாம்! அரசே!

ஆன்ழெல் : ஏன் சாவப் பயமாக இருக்கிறதா?

கத்தேரினா : சாவ வேண்டுமா? இதற்குள்ளாகவேவா? இன்னும் எனக்குச் சாகிற வயதாகவில்லையே. நான் அப்படி என்ன தவறு செய்துவிட்டேன் சாவதற்கு; அரசே வேண்டாம்; வேண்டாம். வாழ்க்கையின்

சுவையை நான் இன்னும் உணரவில்லை. என்னைச் சாகடிக்கவேண்டாம். நான் அப்படி என்ன தவறு உங்களுக்குச் செய்துவிட்டேன். வேண்டாம் — வேண்டாம் என்னை வாழ விடுங்கள்.

ஆன்ழெல் : அது முடியாது. நான் சொன்னது— சொன்னதுதான்—நீ சாக வேண்டியதுதான். ஆனால் ஒரே ஒரு வழி உண்டு.

கத்தேரினா : அது என்ன வழி?

ஆன்ழெல் : இந்தக் கடிதம் யார் எழுதியது அதைச் சொல்லிவிடு. அவன் யார் என்பதைக் காட்டிவிடு போதும். நீ தப்பிக்கலாம்.

கத்தேரினா : கடவுளே!

ஆன்ழெல் : நீ அந்த மனிதனைக் காட்டினால்போதும். அவனுக்குத் தூக்கு - உனக்கு மடம் (convent) விரைவில் எந்த முடிவுக்காவது வா.

கத்தேரினா : கடவுளே!

ஆன்ழெல் : என்ன, கூறமாட்டாயா?

கத்தேரினா : இதோ கூறுகிறேன் அரசே!

ஆன்ழெல் : ஊம். சொல் இரண்டில் ஒன்று சொல். அவன் யார் என்று சொல்லிவிடு! நீ தப்பித்துக் கொள்ளலாம்.

கத்தேரினா : இந்தப் பூஜை அறையில் எனக்குக் குளிராக இருக்கிறது. அதிகக் குளிர்.

ஆன்ழெல் : இதோ பார். நான் சொல்வதைக் கேள். நான் உனக்கு நன்மை செய்யவே விரும்புகிறேன். இன்னும் ஒரே ஒரு மணி நேரம்தான் இருக்கிறது. ஆம் ஒரே ஒரு மணி. நான் உன்னைத் தனியாக விடுகிறேன். இங்கு யாரும் வரமாட்டார்கள். நன்றாக எண்ணிப்பார். இதோ கடிதத்தையும்

வைக்கிறேன். அவன் பெயரை மட்டும் இதன்கீழ் எழுதிவிடு போதும். நீ கூற வேண்டியதில்லை. நீ தப்பித்துக் கொள்வாய். கத்தேரினா பிரகாதினி நான் சொல்வதைக் கேள்' நான் என் வாக்கை என்றும் தவறியது கிடையாது. அவனைக் காட்டிக் கொடுக்கவேண்டும். அல்லது நீ சாக வேண்டும்.

கத்தேரினா : ஒரு நாளாவது எனக்கு ஓய்வு கொடுங்களேன்.

ஆன்மெழல் : ஒரே ஒரு மணி நேரந்தான் (போகிறார்).

## களம்—5

(கத்தேரினா தனியாகக் கதவருகில் போகிறாள்)

இந்தக் கதவு-ஐய்யோ இதை யாரோ மூடுகிறார்களே. இந்தச் சன்னல் - (சன்னல் அருகில் போகிறாள்—பார்க்கிறாள்) - எவ்வளவோ உயரமாக இருக்கிறதே.

(நாற்காலியில் வந்து விழுகிறாள்.)

சாவு! கடவுளே மிகப் பயங்கரமான நினைவு. அது எதிர்பார்க்காதபோது சாவது என்றால் — ஐயோ உடல் நடுங்குகிறதே—இன்னும் ஒரே மணி நேரந் தானா என் வாழ்க்கை. இந்த நிலைமை உங்களுக்கு வந்தாலல்லவா தெரியும். ஆம்—நான் இன்னும் ஒரே ஒரு மணி நேரந்தான் வாழ்வேன். பிறகு சாகப் போகிறேன் என்று சொல்லிப் பாருங்கள். நினைத்துப் பாருங்கள்— எவ்வளவு கொடூர மானது— பயங்கரமானது என்னால் இந்த நாற்காலியில் உட்கார்ந்து இருக்கமுடியவில்லையே. தலை சுற்றுகிறது —சிறிது படுத்தாவது இருப்போம். (கட்டிலருகில் போகிறாள்)

சற்றுப் படுப்போம்.

(கட்டிலின் சீலையை விலக்குகிறாள்—பயந்து அதை விட்டு ஓடி வருகிறாள்—அங்கே கழுத்தை வெட்டு வதற்காக மரத்தாலான பலிபீடம். கருந்துணியால் மூடி வைக்கப்பட்டிருக்கிறது. அதனருகில் ஒரு கொடுவாள்) கடவுளே—இது என்ன இது? என்ன நான் பார்க்கிறேன்! ஐய்யோ பயங்கரமாக இருக்கிறதே—(கட்டில் திரைச் சீலையை விட்டுவிட்டுப் பயந்து நடுங்கிக்கொண்டே ஓடிவருகிறாள்)

வேண்டாம். ஐயோ கடவுளே வேண்டாம். இது எனக்காகத்தான்; என்னைக் கொல்வதற்காகத்தான் வைக்கப்பட்டிருக்கிறது.

(விழுந்து நகர்ந்துகொண்டே நாற்காலியின் அருகில் வருகிறாள்.)

ஊகும். நான் திரும்பிப் பார்க்கமாட்டேன். திரும்ப மாட்டேன். கடவுளே-கடவுளே! இது என்ன கனவா? உண்மை தானா? இல்லை இங்கு நடப்பதெல்லாம் உண்மைதான். அது என் பலிபீடம் - வாள்.

(சிறு கதவு திறக்கிறது—ரொதோல்போ வருகிறான்)

## களம்—6

### கத்தேரினா—ரொதோல்போ

(கத்தேரினா தனக்குள்ளே)—கடவுளே—
ரொதோல்போ!

ரொதோல் : (ஓடிவந்து) ஆம் நான்தான் கத்தேரினா ஓரே ஒரு வினாடி... என்ன உன்முகம் ஒரே வெறுப்பாக இருக்கிறதே ஏதோ குழப்பத்தையல்லவா காட்டுகிறது உன்முகம்.

கத்தேரினா : ஆம் குழப்பம்தான்—இப்படித் துடுக்குத் தனமாகப் பட்டப்பகலிலே வந்தால்.

ரொதோல் : எனக்கு ஒரே குழப்பமும் ஐயமுமாக இருந்தது. என்னால் இருக்கமுடியவில்லை.

கத்தேரினா : ஏன் எதற்காக ஐயம்?

ரொதோல் : இப்பொழுதுதான் எனக்கு அமைதி. உன்னைப் பார்த்தபிறகுதான் என் மனத்திலிருந்து பயமும், ஐயமும் நீங்கின.

கத்தேரினா : எப்படி நீ வந்தாய்?

ரொதோல் : நீ கொடுத்தாயே அந்தச் சாவியைக் கொண்டுதான்.

கத்தோரினா : அதுதான் எனக்குத் தெரியுமே! ஆனால் கோட்டைக்குள்?

ரொதோல் : என் ஐயத்திற்கு முக்கியமான காரணம். இதைக்கேள். நான் வந்துவிட்டேன். ஆனால் போகமுடியாது.

கத்தேரினா : ஏன்.

ரொதோல் : கோட்டையிலிருந்து இருட்டுவதற்குமுன் யாரும் வெளியே போகக்கூடாது. இது கட்டளை— காவல் எங்கும் இருக்கிறது.

கத்தேரினா : இரவுக்கு முன் யாரும் போகக்கூடாதா?

(தனக்குள்ளே)

தப்பித்து ஓடமுடியாது ஐய்யோ கடவுளே!

ரொதோல் : வழியெல்லாம் ஒற்றர்கள் நின்றுகொண்டிருக்கிறார்கள். சிறைக் கூடத்தைப் போலக் கோட்டையைச் சுற்றிலும் காவல்காக்கப்படுகிறது. நான் பக்குவமாக வந்துவிட்டேன். எங்கும் காவல். சத்தியமாகச் சொல். இங்கு ஒன்றும் நிகழவில்லையே;

கத்தேரினா : இல்லை—ஒன்றும் இல்லை, நீ அமைதியாய் இரு. என் அன்பே ரொதோல்போ. ஒன்றும் இல்லை நீ வீணாக் ஏன் கவலைப்படுகிறாய். இதோபார். முன்பிருந்ததைப் போலவே நான் இருக்கிறேன்.

எனக்கொன்றுமில்லை. ஆனால் நீ விரைவிலே போய்விடு. சர்வாதிகாரி வந்தாலும் வருவார். ஆம் நீ போய்விடு. என் அன்பே-விரைவாக இங்கிருந்து போய்விடு.

ரொதோல் : கத்தேரினா! என் அன்பே! நீ பயப்படாதே சர்வாதிகாரி இப்பொழுது இங்கில்லை. மொவினோ பாலத்திற்கு அருகில் இருக்கிறார். விலங்கிடப்பட்ட மக்களையெல்லாம் ஏதோ வினவிக்கொண்டிருக்கிறார். எனக்குப்பயமாகவும் சந்தேகமாகவும் இருக்கிறது-இன்று கோட்டையும் நகரமும் ஏதோ ஒரு மாதிரி மாறுதலாகவே காணப்படுகிறது. என் கண்ணே கத்தேரினா-படைவீரர்கள் நகரத்தில் இங்குமங்கும் ஓடிக்கொண்டிருக்கிறார்கள். கோவில் எங்கும் கருப்புத்துணி தொங்கவிடப்பட்டிருக்கிறது. சாவுமணி அடிக்கிறது. யாருக்குச் சாவு எனக்குத் தெரியவில்லையே. உனக்காவது தெரியுமா?

கத்தேரினா : தெரியாது.

ரொதோல் : கோவிலுக்கு உள்ளே போகமுடியவில்லை. நகரம் முழுமையும் பயந்து நடுங்கிக்கொண்டிருக்கிறது. ஏதோ குசுகுசு என்று எல்லோரும் பேசுகிறார்கள். நிச்சயமாக யாரோ சாகப் போகிறார்கள். அதில் ஒன்றும் தடைஇல்லை. எங்கே? யார்? அதுதான் எனக்குப் புரியவில்லை. இங்கொன்றுமில்லையே. அவ்வளவுதான் எனக்குத் தேவை. உனக்கு இதைப் பற்றியெல்லாம் ஒன்றும் தெரியாதே-உனக்கொன்றும் ஐயமில்லையே என் கண்ணே-காதலே! சொல்-சொல்லேன்

கத்தேரினா : இல்லை.

ரொதோல் : மற்றதைப்பற்றி நமக்குக் கவலையில்லை. அந்த இரவு பயங்கரம் எப்படி மாறினது. போகட்டும் எப்படியோ தப்பித்துக்கொண்டோம். அதைப்பற்றி

எனக்கு இன்னும் ஒன்றுமே விளங்கவில்லை போகட்டும் கத்தேரினா. அந்தக் கயவன்-ஒற்றன் ஓமோதேய் இனி உனக்குத் தொல்லைதரமாட்டான். நீ எதற்கும் பயப்படவேண்டியதில்லை.

கத்தேரினா : நீ நம்புகிறாயா

ரொதோல் : அவன் செத்தொழிந்தான். உண்மைதான். இதோ என்னைப்பார். என்ன உன்முகம் வாட்டமாக இருக்கிறதே. என்ன-என்ன கவலை உனக்கு கத்தேரினா? நீ எதையும் என்னிடத்தில் மறைக்க மாட்டாயல்லவா? உனக்கொன்றுமில்லையே. ஏதாவதென்றால் சொல். என் உயிரைக்கொடுத்து உன்னை மீட்கிறேன்.

கத்தேரினா : ஒன்றுமில்லை. சத்தியமாகச் சொல்கிறேன் எனக்கொன்றும் நேரவில்லை. உன்னால்தான் நான் பயப்படுகிறேன். நீ போய்விடு ஆம். அதுதான் எனக்குக் கவலையாக இருக்கிறது.

ரொதோல் : நான் வரும்போது நீ என்ன செய்து கொண்டிருந்தாய்?

கத்தேரினா : ஐய்யோ கடவுளே—நீ பேசாது அமைதியாய் இரேன் ரொதோல்போ. எனக்கு ஒன்றும் இல்லை. சிறிதுகூடக் கவலை இல்லை. அதற்கு மாறாக நீ பாடிய அந்தப் பாட்டை—பாட்டின் இசையை எண்ணிக்கொண்டே இருந்தேன்—இதோ பார் என் கித்தார் (இசைக்கருவி) இங்கே இருக்கிறது பார்த்தாயா

ரொதோல் : நான் உனக்குக் கடிதம் எழுதினேன் ரெழினெல்லாவைச் சந்தித்து அவளிடம் கொடுத்தனுப்பினேன் அது உனக்கு வந்து சேர்ந்ததா? அது எங்கும் தவறிவிடவில்லையே. வந்து சேர்ந்ததா?

கத்தேரினா : கடிதம் வந்துசேர்ந்தது. இதோ அந்தக் கடிதம்.

(கடிதத்தைக் காட்டுகிறாள்)

ரொதோல் : கிடைத்ததா. சரி—மகிழ்ச்சி. கடிதம் எழுதினால் போய்ச் சேர்ந்ததோ இல்லையோ என்ற கவலைதான் இருக்கும்.

கத்தேரினா : எல்லா வழியிலும் காவல்தானா யாரும் இரவுக்கு முன் போகமுடியாதா.

ரொதோல் : ஒருவர்கூட போக முடியாது. நான்தான் உனக்கு முன்பே சொன்னேனே. சர்வாதிகாரியின் கட்டளை இது.

கத்தேரினா : சரி அப்படியானால் நீ போகலாம். நீதான் என்னைப் பார்த்துவிட்டாய். பேசிவிட்டாய். இப்பொழுது உனக்கு அமைதிதானே—நீ போ— ஊரெல்லாம் ஏதேதோ பேசுகிறது என்கிறாய். இங்கும் ஒரே அமைதியாக இருக்கிறது. ரொதோல்போ போய்விடு. உன்னைக் கெஞ்சிக் கேட்டுக்கொள்கிறேன். நீ போய்விடு. விரைவாகப் போய்விடு. சர்வாதிகாரி வரக்கூடும். போ என் கண்ணல்ல— போ. நீ இன்று மாலைவரை கோட்டைக்கு உள்ளே இருக்கவேண்டி இருப்பதால் இந்தா நானே உன் போர்வையை மூடுகிறேன். இங்குள்ள ஒற்றர்கள் முன் உன் பயத்தைக் காட்டி விடாதே. இயற்கையாக இரு. ஏதாவது சாக்குப் போக்குச் சொல்லிக்கொண்டு அங்குமிங்கும் போகாதே. அது உன்னைக் காட்டிக் கொடுத்துவிடும். தெரிகிறதா—யாராவது உன்னை எழுதச்சொன்னால் ஏதாவது சொல்லிப் போய்விடு. எழுதாதே.

ரொதோல் : எதற்காக இவ்வளவு அறிவுரைகள் கத்தேரினா?

கத்தேரினா : எதற்காக அவர்கள் உன் எழுத்தைப் பார்க்கவேண்டும்—எனக்கென்னவோ அது கூடா தென்று படுகிறது. பெண்கள் ஏதாவது சொன்னால் அதில் நன்மையே இருக்கும் தெரிகிறதா?—நீ வந்ததற் காக—பார்த்ததற்காக— பேசியதற்காக—இவ்வளவு நேரம் இருந்ததற்காக நன்றி—உன்னைப் பார்க்க வேண்டிய ஆசை இருந்தது பார்த்துவிட்டேன்—பார்த் தாயா நான் எவ்வளவு அமைதியாக இருக்கிறேன். இன்பமாக—பூரிப்போடு இதோ உன் கடிதம்—இசைக் கருவி—வேறு எனக்கென்னவேண்டும். ரொதோல்போ இனி நீ போகலாம்—நீ போனால்தான் எனக்கு இன்பமும், அமைதியும் ஏற்படும்—இந்தா இன்னும் ஒன்றே ஒன்று.

ரொதோல் : என்ன?

கத்தேரினா : ரொதோல்போ நான் இதுவரையில் உனக்கு எந்த அனுமதியும் கொடுத்ததில்லையல்லவா.

ரொதோல் : ஆம்.

கத்தேரினா : இன்றைக்கு நானே தருகிறேன்—இந்தா, (இதழைக் காட்டுகிறாள்.)

ரொதோல் : (அவளைத் தன்கையால் வாரியணைத்து) இன்றே நான் கொடுத்துவைத்தவன்.

கத்தேரினா : நீதான் உண்மையில் பாக்யசாலி. சரி—போ ரொதோல்போ

(ரொதோல்போ போகிறான்.)



## களம்—7

(கத்தேரினா தனியாக)

ஓடிவிடலாம்—அவரோடு ஓடிவிடலாம்! அப்படிக்கூட நான் நினைத்தேன். ஒரு கணம். அது பயனற்றது. அப்படி நான் செய்திருந்தால் அவர் வீணாகவல்லவா மாட்டிக்கொண்டிருப்பார்? அவருக்கு ஒன்றும் வரக் கூடாது. ஏந்த ஒற்றனும் அவரை விலங்கிடக்கூடாது. எப்படியாவது அவர் பிடிபடாமல் இன்றுமாலை சென்றுவிடவேண்டும். ஆம் கடவுளே உன்னை வேண்டுவது ஒன்றேதான். அவர்மேல் யாரும் ஐயப்படக் காரணமில்லை— கடவுளே அவரைக் காப்பாற்று—காப்பாற்று (ரொதோல்போ சென்ற கதவருகில்போய் காதுகொடுத்துக் கேட்கிறாள்.)

இன்னும் என் அன்பர் காலடிகள் கேட்கின்றன. செல்கிறார்...சென்றுகொண்டே இருக்கிறார். சென்று விட்டார். கடவுள் அவரைக்காக்கட்டும்.

(பெரிய கதவு திறக்கிறது.)

கடவுளே!.

(ஆன்ழெல்லோவும்—தீஸ்பும் வருகிறார்கள்.)



## களம்—8

கத்தேரினா—ஆன்ழெல்லோ—தீஸ்ப்

கத்தேரினா : (தனியாக)—யார் இந்தப்பெண்? அன்று இரவு வந்தவளா?

ஆன்ழெல் . ராணி என்ன? முடிவுக்கு வந்துவிட்டாயா?

கத்தேரினா : ஆம் அரசே!

ஆன்மெழல் : சாவு! அல்லது அந்தக் கடிதம் எழுதின வனைக் காட்டிக்கொடு. அவன் யார் என்று சொல்லு கிறாய் அல்லவா?

கத்தேரினா : அந்த முடிவுக்கு வரவில்லை. அரசே!

தீஸ்ப் : (தனியாக) கத்தேரினா! நீயல்லவா உண்மையில் தைரியசாலி சிறந்தவள்.

(ஆன்மெழல்லோ தீஸ்ப்புக்குச் சாடைகாட்டுகிறான் தீஸ்ப் ஆன்மெழல்லோவிடம் ஒரு வெண் சீசாவைக் கொடுக்கிறாள். அதை மேஜைமீது அவன் வாங்கி வைக்கிறான்.)

ஆன்மெழல் : அப்படியானால் நீ இதைக் குடிக்க உடன் படுகிறாய் அல்லவா?

கத்தேரினா : நஞ்சா?

ஆன்மெழல் : ஆம் ராணி! ஆம்!

கத்தேரினா : நஞ்சுண்டால் அந்த மனிதனைச் சிறை செய்யமாட்டீர்களே!

ஆன்மெழல் : உன் முன்னோர்களில் ஒருவர் அவர் மனைவியை இதே தவறுக்காக இப்படித்தான் செய் திருக்கிறார்.

கத்தேரினா : அவர்களைப்பற்றியெல்லாம் பேச வேண் டாம். இறந்தவர்களைப் பற்றிப் பேசுவது ஈனத் தொழில். நஞ்சை எடுத்து வந்துவிட்டீர். நான் குற்றவாளியா? இல்லை ஒருநாளும் குற்றவாளியல்ல. நான் அதை இப்பொழுது உம்மிடம் எண்பிக்க வர வில்லை. உமக்கு என்னிடம் நம்பிக்கை இல்லை. உம்மைப் போல் நான் பொய் பேசுபவளல்ல. இது வரையில் உம்மைக் கணவன் என்று மதித்துதான் ஒழுங்குமீறாது நடந்து வந்தேன். நீர் கணவனாக இருப்பதற்கேற்றவரல்ல என்பது உம் செய்கையில்

நன்றாக விளங்கிவிட்டது. நீர் எதற்காக என்னைத் திருமணம் செய்துகொண்டீர்? என் பணத்திற்காக. என் முன்னோர்களுக்கு வேனிஸ் அரசியலில் உரிமை உண்டு என்பதற்காக மணந்துகொண்டீர். நல்ல பணம்- பதவி--புகழ்வரும் என்பதற்காக மணந்து கொண்டீர். ஆண்டுதோறும் நூறு ஆயிரம் (தூய்க்கா) பொன்நாணயம் வருமானம் வரும் என்பதற்காக மணந்துகொண்டீர். இல்லை என்று மறுக்க உமக்கு தைரியம்உண்டா? இந்த ஐந்து ஆண்டுகளாக இல்லற வாழ்க்கையில் நான் அடைந்த நன்மை என்ன? சொல்லுங்களேன் — எப்பொழுதும் பொறாமை படுவதும், ஐயக் கண்கொண்டு நோக்குவதும் அன்றி அன்பாக ஒரு நாளாவது பேசியதுண்டா—என் உடைந்த இதயத்திற்கு அன்புப் பசை பூசியதுண்டா? ஆறுதல்மொழி கூறியதுண்டா? மனைவி என்று நினைத்தாவது ஏதாவது சிறு அன்பின் அறிகுறியை என்றாவது எப்பொழுதாவது காட்டியதுண்டா கூறுங்களேன். நீங்கள் என்ன வேறு எந்தப் பெண் முகத்திலும் விழிக்காமல் விரதமா இருக்கிறீர்கள். அடடா! எத்தனை வெள்ளாட்டிகள் இச்சைபோல அவளோடு இவளோடு எல்லாம் திரிவது. கண்டவளோடெல்லாம் கனிமொழிபேசுவது, களி யாட்டம் ஆடுவது, நீங்கள் செய்வதில் தவறு கிடையாது. ஆண்இனமே எதுவேண்டுமானாலும் செய்யலாம் என்பதுதானே சமுதாயச்சட்டம். சிடுசிடு என்று இருப்பது—எதைக் கேட்டாலும் பதில் சொல்வ தில்லை. நானும் எங்கும் போகக்கூடாது. கட்டுக் காவலெல்லாம் எனக்கு. கட்டு இல்லாமல் திரிவது உமக்கு. இதுதான் கணவன் மனைவியை நடத்து கின்ற முறையோ. வாழ்க்கையில் மனைவிக்கு அளிக் கும் இன்பங்கள் இவைதாமோ? உம் தந்தையைப் பற்றி—பாட்டனைப்பற்றி முன்னோரைப்பற்றி அவர் கள் வீரப் பிரதாபத்தைப் பற்றி எல்லாம் பேசுவது.

எம்மவரை இடித்துக் கூறுவது. ஒரு நல்ல வார்த்தை என்றாவது என் செவி கேட்டிருக்குமா? இப்படி நடப்பதுதான் மனைவியை இன்பமாக நடத்துவது என்பது உன் சித்தாந்தமா! பெண் பிறப்பென்பது எவ்வளவு இழிவானது என்பதை உணரவேண்டுமானால் என்னைப் போலத் துன்பப்பட்டாலல்லவா தெரியும்! அரசே! ஆம் உம்மைத் திருமணம் செய்து கொள்வதற்குமுன் நான் ஒருவரைக் காதலித்தேன். இன்னும் காதலிக்கிறேன். அதற்காகத்தானே என்னைக் கொல்லப்போகிறீர்கள். எது உண்மை? நடந்ததென்ன? அது தேவையில்லை உங்களுக்கு. ஏதோ கடிதம் இருக்கிறது. அதுவேபோதும் மறைவாக நஞ்சூட்டிக் கொன்றுவிடலாம் என்கிற தைரியம். ஏன் அதுதானே உங்கள் எண்ணம்· இது ஆண்மையல்ல கயமை.

(தீஸ்ப் இருக்கும் பக்கம் திரும்பி) இவரைப் பற்றி நீங்கள் என்ன நினைக்கிறீர்கள்?

ஆன்மெழல் : நாவை அடக்கிப்பேசு.

கத்தேரினா : (தீஸ்பைப் பார்த்து) - நீங்கள், நீங்கள்? உங்கள் செய்கையும், நடத்தையும் அழகாக இருக்கிறது. என் கணவரின் வெள்ளாட்டி, நீங்கள் வைப்பாட்டி யாக உங்களுக்கு என்னைத் தீர்த்துக் கட்டவேண்டிய பொறுப்பு இருக்கத்தான் செய்யும். வைப்பாட்டிகளின் தொழிலே அதுதானே. , தனக்கு அடிமையாக இருக்கின்ற ஆண்ண மீண்டும் அடிமையாக ஆக்கிக் கொள்ள—அவன் கட்டிய மனைவியை எட்டியிருந்து கண்காணித்து இல்லாததையும் பொல்லாததையும் கூறிக் கோள்மூட்டுவதும், கொலை செய்யத் தூண்டுவதும்தானே அவர்கள் தொழில். இந்த நஞ்சுகூட ஒருக்கால் நீங்களே கொடுத்திருக்கலாம். ஏன் அப்படித்தானோ

(ஆன்ழெல்லோவைப் பார்த்து) இந்தப் பெண்ணைப் பற்றி நீங்கள் என்ன நினைக்கிறீர்கள்? இவள் வாக்கு தெய்வவாக்கு. இவளைவிடப் பதிவிரதையை வேறெங்கும் பார்க்கமுடியாது. ஆகையால் இவள் வாயிலே இருந்து வருவதெல்லாம் வேதம். இவள் சொல்வதையெல்லாம் செய்ய வேண்டும் என்பது தானே உங்கள் நோக்கம்.

ஆன்ழெல் : வீண்பேச்சு.

கத்தேரினா : உண்மைதான். நாம் மூவரும் எங்கே இருக்கிறோம். நாம் மூவரும் இந்தக் கொடுமையான நாட்டில்தான் இருக்கிறோம். இந்த உதவாக்கரை குடியரசில்தான் இருக்கிறோம். குடியரசென்ற பெய்ரை வைத்துக்கொண்டு வெட்கமும் மானமு மின்றி நடக்கிற விலங்குகளை விடக் கீழாய் நடக்கிற வேனீஸ் குடியரசில் இருக்கிறோம். ஒரு பேதைப் பெண்ணைக் கொலைசெய்யத் துணிகிற ஆணை இந்தக் குடியரசிலன்றி வேறெங்கும் பார்க்க முடியாது. அதிலும் நீங்கள் இந்தக் குடியரசின் வலக்கை போன்ற சர்வாதிகாரி! ஒரு பெண்ணைக் கொலைசெய்ய அதிலும் மறைவாக மற்றவர் கண்ணுக் குத்தெரியாது. ஆதரவற்ற பெண்ணை—தாய்—தந்தை உற்றார் உறவினர் இல்லாத இடத்தில் கொலை செய்யத் துணிகிற வீரரை சர்வாதிகாரியாக உடைய வேனீஸில் எந்தப் பேச்சும் வீண்பேச்சுத்தான்; ஏதோ என் முன்னோர்கள் என்னைப்போலத் தவறிழைத்த பெண்ணைக் கொன்றதாகச் சற்றுமுன் உம் திருவாக்கால் கூறினீர். அவர்கள் உங்களைப் போலவா செய்தார்கள். வேனீசெல்லாம் திரண்டி ருந்த பொதுமன்றத்திலே கொலைநடத்தினர். நீங்கள் அப்படியல்ல, இதை யாராவது கேட்டால் சிரிப்பார்கள். நீங்கள் இருவரும் இருந்து செய்கின்ற இந்தக்கொலை வேனீஸ் குடிமக்கள் யாவரும் இருந்து

செய்வதைப் போன்றது என்பது உங்கள் நினைவா இருக்கலாம். ஏனென்றால் நீங்கள் வேனீஸ் சர்வாதிகாரி இந்தப் பெண் (தீஸ்பைக்காட்டி) பெண்ணல்ல பேய்—சர்வாதிகாரியின் வைப்பாட்டி பேதாதா. வேறு குடிமக்கள் எதற்கு?

(ஆன்மெழல்லோ—கத்தேரினா கையைப்பிடித்து)

எடுத்துக்குடி நேரமாகிறது.

(கத்தேரினா நஞ்சிருக்கிற மேஜையில் நெருங்கு கிறாள்

நான் சாகவேண்டுமென்பது உங்கள் முடிவு- அவ்வளவு தானே ஊம் சரி.

(நஞ்சு சீஷாவை எடுக்கக் கையை நீட்டுகிறாள்.)

ஓ! கொடுமை! வேண்டாம்! வேண்டாம்! நான் குடிக்கமாட்டேன். இதற்குள்ளாகவா நான் இறக்க வேண்டும். வாழ்க்கைப்பாதையில் அடிஎடுத்துத்தானே வைத்துள்ளேன். அதற்குள்ளாகவா நான் இறக்க வேண்டும். நன்றாகச் சிந்தித்து முடிவுசெய்யுங்கள் அரசே! நீங்கள் சர்வாதிகாரி! நீங்கள் எதுவேண்டுமா னாலும் செய்யலாம். ஆனால் ஒரு பெண் பேதமையே குடிகொண்ட இனம். ஆதரவற்றவள் தற்காக்க வலிவற்றவள். உற்றார் உறவினர் அற்றவள் நட்பற்ற நங்கை—வேண்டாம் எங்கோ ஒரு மூலையில்கூட அல்லாமல் தன் வீட்டில்—மற்றவர்கள் கண்ணுக்குத் தெரியாமல் நஞ்சூட்டிக் கொல்வது இழிவான செய்கை—வேண்டாம். அரச குடும்பத்தினர்க்குரிய பண்பல்ல, ஆண்மையல்ல; வேண்டாம் வேண்டாம்... அம்மா! அம்மா! அம்மா!

தீஸ்ப் : பாவம்!

கத்தேரினா: பாவம்! பாவம் என்றுதானே சொன்னீர் கள். ஆம்! நன்றாகக் கேட்டேன். உங்களுக்காகிலும் அந்த இரக்கம் இருந்ததே! நீங்களே சற்றுச் சிந்தியுங்

கள். என்னைக் கொலை செய்யப் போகிறார்கள். நான் உங்கள்மீது தவறாக ஏதேதோ எண்ணி விட்டேன். நீங்கள் ஒருக்காலும் இதற்கு இசைந்திருக்க மாட்டீர்கள். பெண்ணல்லவா-பெண்மை என்பது என்ன என்று பெண்களுக்குத்தானே தெரியும். நான் யாவும் உங்களிடத்தில் விளக்கமாகக்கூறுகிறேன். நீங்கள் அவருக்குச் சொல்லுங்கள். சர்வாதிகாரி உங்கள் பேச்சைக் கேட்பார். என் அழுகையும் கூக்குரலையும்விட உங்கள் பேச்சு அவரை அடக்கி ஆட்கொள்ளும். இந்தச் செயல் ஆண்மையற்ற இழிவான செயல் என்று அவருக்குச் சொல்லுங்கள். ஆம். நீங்கள்தான் சொல்லவேண்டும். நான் ஏதேதோ ஆத்திரத்தில் புத்தியற்று சொல்லிவிட்டேன். என்னை மன்னியுங்கள். நான் உங்களைப் புரிந்துகொள்ளாது உங்களை நிந்தித்துப் பேசிவிட்டேன். பொறுத்துக் கொள்ளுங்கள். கோபப்படாதீர்கள். நான் கடவுளறியச் சொல்லுகிறேன். நான் ஒரு வினாடிகூட ஒழுங்கு தவறி நடந்தது இல்லை. என் கணவனுக்குத் துரோகம் செய்ததே கிடையாது. சத்தியமாகச் சொல்லுகிறேன். இதுவரையில் நான் உண்மையாகக் கற்புள்ளவளாகவே இருந்துவருகிறேன். அவர் என்னை நம்பவில்லை. நான் சொல்லுவதையும் நம்பமாட்டார். ஆண் இனமே பெண் பேச்சை நம்பாது. அது அவர்கள் உடலிலே ஊறிய ஒன்று. எவ்வளவு உண்மையை எடுத்துக்கூறினாலும்கூட அவர்கள் நம்பமாட்டார் கள். நீங்கள் கூடவா நம்பமாட்டீர்கள்-என் போன்ற பெண்ணாயிற்றே நீங்கள். உங்களுக்குக் கூடவா என் உள்ளம் தெரியவில்லை. சாவு-அதை நினைக்கும் போதே எனக்குப் பயமாக இருக்கிறதே-வேண்டாம் வேண்டாம். என்னைச் சாகடிக்கவேண்டாம். அவரிடத்திலே சொல்லுங்கள். என்னைச் சாகடிக்க வேண்டாமென்று சொல்லுங்கள்.

ஆன்மெழல் : ஊம். நேரமாகிறது ஆகட்டும்.

கத்தேரினா : பார்த்தீர்களா நான் உங்களிடம் சொல்லி உண்மையை விளக்கி உங்கள் மனதைக் கவர்ந்து விடுவேனாம். அதைக்கூடத் தடுக்கிறார். (ஆன்ழெல் லாவைப் பார்த்து)

கொடிய மனிதரைய்யா நீங்கள்.

ஆன்ழெல் : போதும்-போதும் கத்தேரினா! தவறுக்கு எப்பொழுதும் தண்டனைதான்-சாக்குழி சவம் கேட்கிறது. ஏமாற்றப்பட்ட கணவன் மனைவியின் உயிரைக் கேட்கிறேன்-வீணாக எதற்காகப் பேசிப் பேசிக் காலம் போக்குகிறாய்.

கத்தேரினா : முடியாது. கடவுள்மேல் ஆணையாகக் கூறுகிறேன். முடியாது.

ஆன்ழெல் : (விஷத்தைக்காட்டி) எடுத்துக்குடி.

கத்தேரினா : குடிக்கமாட்டேன்.

ஆன்ழெல் :என்ன-குடிக்கமாட்டாயா? சரி-அப்படியானால் சரி. முதல் முடிவுதான் சரி—ஏய்? யார் அங்கே. என் வாளை எடு - எடுத்துவா! நானேபோய் எடுத்து வருகிறேன்.

(கோபமாக வாளெடுக்க அறைக்கு ஓடுகிறான்.)

## களம்—9

கத்தேரினா—தீஸ்ப்

தீஸ்ப் : இன்னும் சில வினாடிகளே நாம் தனித்துப் பேச முடியும். சர்வாதிகாரி அதற்குள் வந்தாலும் வரலாம். நான் சொல்வதைக் கவனமாகக் கேளுங்கள். அவன் உங்களைக் காதலிக்கிறான். உங்களுக்காக அல்ல நீங்கள் இப்பொழுது நினைக்க வேண்டியது— அவனுக்காக. அவனுக்காக மட்டுமல்ல. உங்களுக் காகவும் கூறுகிறேன். சர்வாதிகாரி சொல்வதைச்

செய்யுங்கள். இல்லையென்றால் நீங்கள் தப்ப முடியாது. இதைவிட விளக்கமாக நான் சொல்ல மாட்டேன். நான் சொல்வதைப் புரிந்துகொள்ள மாட்டேன் என்கிறீர்கள். சிந்திக்கமாட்டேன் என்கிறீர் கள். இப்பொழுது, சற்றுமுன்புதான் பாவம் என்று என் வாயிலிருந்து தப்பி வந்துவிட்டது. அந்தச் சொல் சர்வர்திகாரி முன்பு-பைத்தியக்காரி போல-அந்தச் சொல்லை உரக்கப் பலதடவை கூறிவிட்டீர்கள். சர்வாதிகாரி என்ன நினைப்பார். அவர் சந்தேகப்பட மாட்டாரா? நான் உங்களிடத்தில் உண்மையை விளக்கிக்கூறினால் அதை மனதிலேயே காப்பாற்றுகிற நிலையில் நீங்கள் இல்லை. துடுக்குத்தனமாக அதை வெளியிட்டால் திட்டமெல்லாம் தூளாகிவிடும். அதோடு யாவும் தீர்ந்தது. அதற்காகத்தான் சொல்லு கிறேன். அவர் இச்சைபோல நடவுங்கள். நஞ்சுதானே குடிக்கச் சொல்லுகிறார். குடியுங்கள். மறுக்காதீர்கள். வாள் உங்களை ஒருக்காலமும் மன்னிக்காது. நான் சொல்வது புரிகிறதா. வீணாக மறுக்காதீர்கள். நஞ்சையே குடியுங்கள். வாள்வேண்டாம். நான் இதைவிட இன்னும் உங்களுக்கு என்ன சொல்வ தென்றே புரியவில்லை. அவன் உங்களைக் காதலிக் கிறான். யாராவது ஒருவர் நன்மை செய்யவேண்டும்? யாராவது ஒருவர் நன்றியைக் காதலை விளக்க வேண்டும்—நான் சொல்லுவது உங்களுக்கு விளங்க வில்லை - ஊகும். உண்மையைக் கூறக்கூடாது. நான் சொல்வதைக் கேளுங்கள். நஞ்சைக் குடியுங்கள். மறுக்காதீர்கள்.

கத்தேரினா : என்னம்மா சொல்லுகிறீர்கள்...

தீஸ்ப் : என்ன சொல்லுகிறாரோ அதைச் செய்யுங்கள். மறுக்கவேண்டாம் ஒரு வார்த்தைகூட வேண்டாம். உன் மணாளர் என்மட்டில் வைத்திருக்கிற நம்பிக்கையைக் கெடுக்காதீர்கள். தெரிகிறதா.

உங்கள் வாய் ஒட்டை. நான் ஒன்றும் சொல்ல மாட்டேன். இங்கு இந்த அறையில் ஒரு பெண் சாகப் போகிறாள். ஆனால் நீங்களல்ல. நான் சொல்வதைக் கேளுங்கள். மறுக்கவேண்டாம். நஞ்சைக் குடியுங்கள்'

கத்தேரினா : சரி உங்கள் விருப்பம்போல் ஆகட்டும். அப்படியே செய்கிறேன். அதோ அவர் திரும்பிவருகிற ஓசை கேட்கிறது. (அறைப்பக்கம் தீஸ்ப் ஓடுகிறாள். கதவு திறக்கிறது.)

தீஸ்ப் : அரசே! வேண்டாம்! வாள்வேண்டாம் தனியே வாருங்கள். தனியே வாருங்கள்!

(வேலையாட்கள் வாளை எடுத்துக் கொண்டு வந்து பக்கத்து அறையில் நிற்கிறார்கள். ஆன்மெழல்லோ வருகிறார்.)

## களம்—10

கத்தேரினா—தீஸப்—ஆன்மெழல்லோ

தீஸ்ப் : அரசே! ராணி நஞ்சு அருந்த உடன்பட்டு விட்டார்கள்.

ஆன்மெழல் : (கத்தேரினாவைப் பார்த்து) ஊம். உடனே ஆகட்டும்.

கத்தேரினா : (நஞ்சு சீசாவை எடுத்துக்கொண்டு தீஸ்பைப் பார்த்து.) நீங்கள் என் கணவரின் ஆசைநாயகி என்பது எனக்குத் தெரியும். உங்கள் உள் எண்ணமென்ன—மறைவான நோக்கமென்ன என்பதெல்லாம் விளங்காமலா இருக்கிறது. என்னைக் கொன்றுவிட்டு—என் கணவனை - சர்வாதிகாரியை—மன்னனை உன் கைவசப்படுத்திக் கொண்டு ராணியாகப் பார்க்கிறாய். சீ. நீயும் ஒரு பெண்ணா. பலருக்கு உடலை விற்ற பேய்க்கு நல்லெண்ணம் உண்டாகுமா? இப்படி இருபத்திரண்டு வயதில்

இறக்கின்ற கொடுமையான நிலை ஏற்பட்டுங்கூட வேறொரு உயிரைக் காப்பாற்றுகிறேன். உன்போலல்ல நான். பெண்ணினத்தின் புகழையே கெடுத்து விட்டாயே கொலைகாரப் பேயே!

(நஞ்சைக் குடிக்கிறாள்)

ஹீஸ்ப் : (தனக்குள்ளே) வீணான பேச்சு—பாவம்

ஆன்ழெல்லோ : (வாளை வைத்துக்கொண்டிருக்கிற வேலையாட்களைப் பார்த்து) சரி நீங்கள் போகலாம்.

கத்தேரினா : ஐய்யோ நஞ்சி தலைக் கேறிவிட்டதே உடல் நடுங்குகிறதே (ஹீஸ்பை முறைத்துப்பார்த்து) நயவஞ்சகப்பேய்! கொலைகாரப்பிசாசு! ஆன்ழெல்லோ வைப்பார்த்துஇப்பொழுது மகிழ்ச்சிதானே உங்களுக்கு? நான் இனிஇறக்கப்போகிறேன். இனிநான் உங்களுக்குப் பயப்படவேண்டியதில்லை. நான் சொல்லுவதை இப்பொழுதாகிலும் கேளுங்கள். கொடிய கணவனே! நான் ஒரு மனிதனைக் காதலித்தது உண்மைதான். ஆனால் நான் மாசு மருவற்றவள். தூய்மை நிறைந்தவள். கட்டிய கணவனை இதுவரையில் ஏமாற்றாதவள். கற்பினின்றும் சிறிதும் வழுவாதவள்.

ஆன்ழெல் : எனக்கு நம்பிக்கை இல்லை.

ஹீஸ்ப் : (தனக்குள்) நான் நம்புகிறேன் அவள் தூய்மை யானவள். அதில் சிறிதுகூட ஐயமில்லை.

கத்தேரினா : தலைசுற்றுகிறது. நிற்கமுடியவில்லை... விழுந்துவிடுவேன் போல் தோன்றுகிறது...வேண்டாம் இந்த இருக்கை வேண்டாம். என்னைத் தொடாதீர் கள். நான் முன்னமே சொன்னேன். நீங்கள் கணவனல்ல. கணவனென்ற அந்தத் தூய சொல்லுக்கே ஏற்றவரல்ல. நீங்கள் ஆண்மை யற்றவர். மனிதப் பண்பற்றவர். ஆம் கயவாளி.

(தடுமாறிக்கொண்டே பூஜை அறைக்குள் போகிறாள்) நான் அங்கே சாகப்போகிறேன், ஆம் கடவுளின் முன்பு—அமைதியாக தனியாக உங்கள் கண்களிலே படாமல் சாகப்போகிறேன்.

(பூஜை அறையின் வாயிற்படியைத் தட்டுத் தடுமாறிப் பிடித்துக்கொண்டே) நான் கடவுளைத் தொழுது கொண்டே சாகப் போகிறேன். (பூஜை அறைக்குள் போகிறாள்.)

ஆன்மெழல் : ஏய்! யார் அங்கே! (வேலைக்காரன் வருகிறான்) இந்தா என் இரகசிய அறையின் சாவி! அங்கே இரண்டு மனிதர்கள் இருக்கிறார்கள். ஒன்றும் பேசாமல் அவர்களை இங்கே அழைத்துவா.

(வேலையாள் போகிறான்)

(தீஸ்பைப் பார்த்து) அறையில் இருக்கிற இரண்டு அரண்மனை இராக்காவற்காரரிடம் சில சொல்லப் போகிறேன். அது முடிந்த பிறகு, இனி இங்கு நடக்க வேண்டிய வேலைகள் உன் பொறுப்பு — மிக மறைவாக நடக்கவேண்டும். வெளிக்கு ஒன்றுமே தெரியக் கூடாது. நினைவிருக்கட்டும். யாருக்கும் தெரியக் கூடாது.

(இராக் காவற்காரர்கள் வருகின்றனர்)

## களம்—11

(ஆன்மெழல்லோ — தீஸ்ப்—இராக் காவற்காரர்கள் இருவர்)

ஆன்மெழல் : (இராக் காவற்காரரைப் பார்த்து) இரவுக் காவற்காரர்கள் நீங்கள்தானே? சரி! நம் அரண்மனையின் கல்லறை எங்கே இருக்கிறதென்று உங்களுக்குத் தெரியுமல்லவா?

(காவற்கார்ரர்கள் இருவரில் ஒருவன்) தெரியும் அரசே.

ஆன்ழெல் : கோட்டையில் இன்று போர்வீரர்கள் மிகுதியாக இருக்கின்றார்கள். ஒருவருக்கும் தெரியாமல் நீங்கள் அங்கே போக முடியுமா? திரும்பி வர முடியுமா?

காவற். ஒருவன் : ஒருவர் கண்களிலும் படாமல் போய்த் திரும்பி வர இரகசிய வழி இருக்கிறது அரசே!

ஆன்ழெல் : சரி—(பூஜை அறையைக் காட்டி) அங்கே ஒரு பெண் இறந்து கிடக்கிறாள். கல்லறையில் ஒரு குழி தோண்டப்பட்டிருக்கிறது. அங்கே அவளை எடுத்துப் போய் அடக்கம் செய்து விடவேண்டும்—தெரிகிறதா?

காவற். ஒருவன் : அப்படியே அரசே!

ஆன்ழெல் : (தீஸ்பைப் பார்த்து) யாவும் மறைவாக நடக்க வேண்டும். கவனித்துக் கொள். (ஆன்ழெல்லோ போகிறார்)

தீஸ்ப் : (ஒரு பண முடிப்பை எடுத்து அவர்களிடம் கொடுத்து) இருநூறு பொன் நாணயங்கள் இதிலிருக்கிறது. நான் சொல்வதைப்போல் நடந்தால் நாளைய காலையில் இதைப்போல் இருமடங்கு உங்களுக்கு என்ன சொல்கிறீர்கள்.

(காவற்காரர்கள் பணமுடிப்பை வாங்கிக்கொண்டு)

அப்படியே செய்கிறோம் அம்மா. எங்கே போக வேண்டும்.

தீஸ்ப் : முதலில் கல்லறைக்கு.

## களம்—12

தீஸ்ப்—இராக்காவற் காவலர் இருவர்—ஒரு வேலைக்காரன்

(கத்தேரினா—பிணத்தின் மேல் இடும் துணியால்

மூடப்பட்டுக் கட்டிலில் கிடத்தப்பட்டிருக்கிறாள். அவள் மார்பின் மீது பித்தளைச் சிலுவை வைக்கப் பட்டிருக்கிறது. தீஸ்ப் கத்தேரினாவின் முகத்தை நன்றாகப் புரட்டிப் புரட்டிப் பார்க்கிறாள். முகம் வெளுத்திருக்கிறது.)

தீஸ்ப் : (வேலைக்காரனைப் பார்த்து) இப்படி விளக்கை எடுத்துவா. (மீண்டும் கத்தேரினாவைப் புரட்டிப் பார்க்கிறாள். கண்ணை, உதடுகளைச் சோதிக்கிறாள் —கட்டிலின் திரைச்சீலைகளை இழுத்து விட்டுக் கட்டிலை மூடுகிறாள்.)

(இராக்காவற் காரரைப் பார்த்து) நீங்கள் கல்லறைக்குச் சென்று வந்ததை யாரும் பார்க்க வில்லையே. நிச்சயமாகச் சொல்லுகிறீர்களா?

காவற்.ஒருவன்: ஒரே இருட்டு.சத்தடங்கி விட்டது.நாங்கள் போகும் போதும் வரும்போதும் ஒருவர்கூட எதிர்ப் படவில்லை. நீங்கள்தான் பார்த்தீர்களே. குழியிலே பிணப் பெட்டியை வைத்துக் குழியை மூடி விட்டோம், மேலே கருங்கற் பலகையை வைத்து அடைத்துப் பூசி விட்டோம். யாரும் ஐயப்படமுடியாது. கல்லைத் தோண்டிப் பார்த்தால்கூட பெட்டி இருக்கும். ஆனால் பெட்டியினுள் பிணம் இருக்கிறதா இல்லையா என்பது தெரியாது. ஆனால் மக்களுக்கெல்லாம் இன்று இறந் தவர் உடல் அடக்கம் செய்யப்பட்டுள்ளதென்பதில் சிறிதும் ஐயம் உண்டாகாது. நீங்கள் ஏன் வீணாகக் கவலைப்படுகிறீர்கள். வேலையைச் செவ்வனே முடித்து விட்டோம்.

தீஸ்ப் : சரி நல்லது செய்தீர்கள்.

(வேலைக்காரனைப் பார்த்து) எங்கே ஆண் உடைகள் உடனடியாகத் தேவை என்றேனே. எங்கே அவைகள்?

வேலைக்காரன்: (இருட்டில் இருந்த ஒரு சிறு மூட்டையைக் காட்டி) இதோ இருக்கிறதம்மா,

தீஸ்ப் : உன்னிடம் சொன்ன குதிரைகள்? தயாராக இருக்கின்றனவா?

வேலைக்காரன் : சேணத்தோடு தயாராக இருக்கின்றன.

தீஸ்ப் : நல்ல குதிரைகளா?

வேலைக்காரன் ; அருமையான குதிரைகள்.

தீஸ்ப் : சரி—(இராவேலைக்காரர்களைப் பார்த்து) நல்ல குதிரைகளாக இருந்தால் இந்த வேனீஸ் எல்லையைத் தாண்டிப் போக எவ்வளவு நேரம் செல்லும்?

இராக்காவல் : குறுக்கு வழியாகத் தாண்டிச் செல்வதாயிருந்தால் மூன்றே மூன்று மணிநேரம் போதும். வழி நல்லவழி.

தீஸ்ப் : சரி நீங்கள் போகலாம். நாளைக்கு வந்து உங்கள் பரிசுத் தொகையைப் பெற்றுக்கொள்ளுங்கள். இங்கு நடந்ததைப்பற்றி வாயைத் திறக்கக்கூடாது—நினைவிருக்கட்டும் தெரிகிறதா?—சரி போங்கள் - (இராக்காவலர் போகின்றனர்) (வேலைக்காரனைப் பார்த்து) நீ இந்த அறைக்கதவை மூடு. எந்த அவசரமாக இருந்தாலும் யாரையும் உள்ளே விடாதே.

வேலைக்காரன் : ரொதோல்போ வருகிற வழியைக்கூடவா மூடிவிட வேண்டும். அவர் அடிக்கடி அந்த வழியாகத்தான் வருகிறார். அதைக் கூடவா அம்மா மூடிவிடவேண்டும்.

தீஸ்ப் : வேண்டாம். அதை மூடாதே. அவர் வருவதாக இருந்தால் வரட்டும். மற்றவர்களை விடாதே—தெரிகிறதா அவர் மட்டுந்தான் வரலாம். வேறு யாரையும் எந்த அவசரமாக இருந்தாலும் விடாதே—நீ கூட நான் கூப்பிட்டால்தான் வரவேண்டும். போ. கதவை மூடிவிட்டுப்போ.

(வேலைக்காரன் போகிறான்)

## களம்—13

(தீஸ்ப் : கத்தேரினா கட்டிலில் பிணம் போலக் கிடக்கிறாள்.)

தீஸ்ப் : இனி நீண்ட நேரம் காத்திருக்க வேண்டியதில்லையென்று நினைக்கிறேன். அவளுக்குச் சாவத் துணிவில்லை, காதலிக்கப்பட்ட பிறகு யாருக்குத்தான் சாவ மனம் வரும். காதல் இல்லை என்றால் யாருக்குத்தான் வாழ மனம் வரும்.

(கட்டில் பக்கம் திரும்பி) நீ மகிழ்ச்சியாக சாவாய் அல்லவா? என் தலை வெடித்துவிடும்போல் இருக்கிறது இந்த மூன்று இரவாக நான் தூங்கவே இல்லை. முந்தியநாள் இரவு விழா, நேற்று உங்கள் திருட்டுச் சந்திப்பைக் கண்டுபிடித்தேன். இன்றைய இரவு... நாளைக்காவது தூங்குவேனோ என்னவோ (நாடக அரங்கை நான்கு பக்கமும் பார்க்கிறாள்). ஏல்லோரும் மகிழ்ச்சியாகத்தான் இருக்கிறார்கள். கை தட்டுகிறார்கள். இந்த நடனம் நன்றாக இருக்கிறது. அந்த இசை இனிமையானது என்கிறார்கள். அறிவற்றவர்கள். அடடா! என்ன அழகு! என்ன நடிப்பு! என்ன நொடிப்பு என்றெல்லாம் புகழ்கிறார்கள். பூமாரி சொரிகிறார்கள். ஆனால் உள்ளம் ஒடிந்து உதிரம் சொட்டுவதை அவர்கள் உணர்வதில்லை. ரொதோல்போ! ரொதோல்போ! நீ இன்றேல் எனக்கு வாழ்வில்லை. விளக்குக்கு எண்ணெய்—விளைநிலத்திற்கு மழை—எப்படியோ அப்படி நீ எனக்கு. நான் இறந்தால் உன் அருகிலேயே இறக்கவேண்டும். உன் எண்ணத்திலிருந்து என் நினைவைப் பிரிக்கமுடியாத வகையிலே இறக்கவேண்டும். மற்ற பெண்களோடு இன்பமாக இருக்கும் போதுகூட என் நிழல் உன் அருகில் பிரியாதிருக்கின்ற நிலையிலே இறக்கவேண்டும். உனக்காக இறக்கவேண்டும். உன் நன்மைக்காக இறக்கவேண்டும்.

உன் மகிழ்ச்சிக்காக இறக்கவேண்டும். ஆம் அந்த நாட்களில் நான் அடிக்கடி இப்படித்தான் நினைத்தேன். சாவு—சாவைப் பற்றி எனக்குக் கவலையில்லை. நீ என்றும் என்னை மறக்கக்கூடாது. ஆம். அந்த முடிவில்தான் இருக்கிறேன். நீ இன்பமாக இருந்தால் போதும். என்னைப்பற்றிக் கவலை இல்லை காதல் எனக்குக் கானல் நீராகிவிட்டது.

(கட்டிலினருகில் போகிறாள். கத்தேரினாவைப் பார்க்கிறாள். அந்தப் பித்தளைச் சிலுவையை எடுக்கிறாள்.)

இந்தச் சிலுவை உலகத்தில் ஒருவருக்கு நன்மையைத் தான் செய்திருக்கிறது. ஆனால் அம்மா! உன் மகளுக்கு அல்ல—உன் உரிமை மகளுக்கு அல்ல— உன் அன்பு மகளுக்கு அல்ல!

(சிலுவையை மேஜை மீது வைக்கிறாள். கதவு திறக்கிறது. ரொதோல்போ வருகிறான்).

## களம்—14

தீஸ்ப்—ரொதோல்போ—கத்தேரினா கட்டிலிலேயே.

தீஸ்ப் : ஆ! நீயா—ரொதோல்போ! நான் உன்னிடம் சில பேசவேண்டும். கேள்!

ரொதோல் : நான் கூடத்தான் உன்னிடம் சில பேச வேண்டுமென்று வந்துள்ளேன்—முதலில் நான் சொல்வதைக்கேள்.

தீஸ்ப் : ரொதோல்போ!

ரொதோல் : இங்கு வேறு யாருமில்லையே?

தீஸ்ப் : இல்லை நான் மட்டுமே இருக்கிறேன்.

ரொதோல்: சரி இங்கு யாரும் வரவேண்டாமென்று கட்டளை இடு.

தீஸ்ப்: அது முன்னமே இடப்பட்டுள்ளது. இங்கு யாரும் வரமாட்டார்கள். (ரொதோல்போ அங்குள்ள கதவு களையெல்லாம் மூடித் தாளிடுகிறான்). ஏதோ சொல்லவேண்டுமென்றாயே சொல்லேன்.

ரொதோல்: நீ எங்கிருந்து வந்தாய்? எதற்காக இப்படி உன் முகம் வெளுத்திருக்கிறது? இன்றைக்கெல்லாம் நீ என்ன செய்தாய்? சொல்—இந்தக் கைகள் என்ன செய்தன. சொல் - சொல் நீ சொல்லமாட்டாய் அல்லவா? நான் சொல்லுகிறேன் - மறைக்காதே—சாக்குப்போக்குத் தேடாதே. எனக்கு எல்லாம் தெரியும். இதோ இந்தக் கதவிற்கு மறுபுறம் தப்ன் இருந்தாள் அவள் இங்கு நடந்ததெல்லாம் பார்த்துக் கொண்டுதான் இருந்தாள். ஒரு வார்த்தை கூட விடாமல் கேட்டுக்கொண்டிருந்தாள். நீ சொன்னதை அப்படியே சொல்கிறேன், கேள். சர்வாதிகாரி என்னிடம் நஞ்சில்லை என்றார். நீ சொன்னாய்—என்னிடம் இருக்கிறது — நீ சொல்ல வில்லையா—உண்டு இல்லை என்று சொல். பொய் சொல்லாதே! உன்னிடம் நஞ்சு இருந்ததல்லவா! இதோ என்னிடம் குத்துவாள்.

(மார்பில் மறைத்து வைத்திருந்த குத்துவாளை எடுக்கிறான்.)

தீஸ்ப்: நீ என்னைக் கொல்லப்போகின்றாய். அதுதானே இந்த எண்ணம்தான் உனக்கு வந்ததோ—நல்லது - அப்படியே செய் - என்ன நடந்தது - எது உண்மை, எது பொய் என்பதெல்லாம் தெரிந்து கொள்ளாமல் என்னைக் கொலை செய்ய நினைக்கிறாய். அவ்வளவு இழிந்தவளாகக் கருதப்பட்டேன் நான். மற்றொருத்தி யின் காதலுக்காக என்னைக் கொல்லப்போகின்றாய்.

அல்லவா - ரொதோல்போ - உன்வாயாலேயே சொல். அதுதானே - நீ என்னைக் காதலிக்கவில்லை மற்றொருத்தியின் காதலுக்காக என்னைக் கொல்லப் போகிறாய். சொல்லேன். நீ என்னைக் காதலிக்க வில்லை. அல்லவா?

ரொதோல் : இல்லை ஒருபோதும் நான் உன்னைக் காதலிக்கவில்லை.

தீஸ்ப் : பாவி – இந்தச் சொற்கள்தான் என்னைக் கொல் கின்றன - இந்தக் குத்து வாளல்ல.

ரொதோல் : உன்மேல் காதலா! எனக்கா! இல்லை. இருந்ததுங்கிடையாது. வேண்டுமானால் பொய் சொல்லலாம்.

தீஸ்ப் : நன்றி கெட்டவனே! நீ அவளைத்தான் காதலிக் கிறாயா! சொல் அதையும் சொல்லி விடு.

ரொதோல் : ஆம் அவளைத்தான் காதலிக்கிறேன். சாவப் போகின்ற நீ கேட்பதால் சற்று விளக்கமாகவே சொல்கிறேன் கேள் : இந்த உலகத்திலே உள்ள பொருள்களில் உயர்ந்த பொருளாகக் கடவுள்தன்மை பொருந்திய பொருளாக - என் உயிராக - உடலாக - கண்ணின் ஒளியாக - எண்ணமாக - என் இதயமாக - எழுச்சியாக - செல்வமாக - இன்பமாக நான் அவளைக் காதலிக்கிறேன். புரிகிறதா இப்பொழுது உனக்கு? அவளே எனக்கு யாவும்.

தீஸ்ப் : அப்படியானால் நான் செய்தது நல்லதுதான்—

ரொதோல் : என்ன நீ செய்தது நல்லதுதான்.

தீஸ்ப் : ஆம் நான் செய்தது நல்லதுதான். இப்பொழு தாவது நம்புகிறாயா?

ரொதோல் : நம்பிக்கையா - எனக்கா - மறுமுறையும் கூறுகிறேன். தப்ன் சொன்ன சொற்கள் இன்னும் என்

செவிகளில் ஒலித்துக் கொண்டிருக்கின்றன. ''அவர்கள் மூவர்தான் அந்த அறையில் இருந்தார்கள். சர்வாதிகாரி - ராணி - அந்தம்மாள். அந்தக் கொடிய அம்மாள் - அந்த அம்மாளைத்தான் சர்வாதிகாரி தீஸ்ப் - தீஸ்ப் என்று அழைக்கிறார். அவர்கள் மூவரே இரண்டுமணி நேரம் வரையில் அந்த அறையில் இருந்தனர். பாவம், ராணி அழுதார்கள். புலம்பினார்கள். மண்டியிட்டுக்கூடக் கெஞ்சினார்கள். ராணியின் வேண்டுகோள் மறுக்கப்பட்டது. தீஸ்பே நஞ்சை எடுத்துவரச் சென்றவர்கள்; எடுத்து வந்தார்கள்; கொடுத்தார்கள். குடிக்கும்படிக் கட்டாயப்படுத்தினார்கள் - அந்தக் கொடிய அம்மாளே ராணியின் இறந்த உடலை எடுத்துப் போனார்கள்.'' போதுமா (கைக்குட்டையை எடுத்துக்காட்டி) இந்தக் கைக்குட்டை கத்தேரினா அறையில் கிடந்தது. இது யாருடையது? உன்னுடையது.

சிலுவையைக் காட்டி

இதோ நீ வைத்திருக்கிறாயே இந்தச் சிலுவை இது யாருடையது? அவனுடையது. இன்னும் வேறென்ன விளக்கம் வேண்டும்? அழு, கெஞ்சு, கூத்தாடு, மன்னிப்புக் கேள். சற்றுமுன்பு உன்முன் அவள் என்ன என்ன செய்தாளோ அவையெல்லாம் நீ செய்தாலுங் கூடஉன் உயிர் தப்பாது. பழிக்குப்பழிதான்.

தீப்ஸ் : ரொதோல்போ.......

ரொதோல் : நீ குற்றவாளியல்ல என்பதை இனி மறுக்க முடியுமா? துணிவு உண்டா உனக்கு? சொல் பார்ப்போம்.

தீஸ்ப் : இல்லை ரொதோல்போ! உன்னிடம் தப்ன் சொன்னதெல்லாம் உண்மைதான். அந்த முடிவுக்குத் தான் நீயும் வந்து விட்டாய். நான் சாகிறேன் அதைப் பற்றி எனக்குக் கவலை இல்லை. உன் காலடியில் உன்

காலடியிலேயே இறக்கவேண்டுமென்று நினைத்துக் கொண்டிருந்தேன். அதற்காக என்ன செய்வது என்று கூட வழி தேடினேன். உன் கையால் இறப்பது நான் நினைத்ததைவிட எத்தனையோ பங்கு மேலானது - இன்பமானது நீ விரும்பிக் கேட்காவிட்டாலுங்கூட என் கடைசிமூச்சு—பேச்சுக்களையாவது உன் செவிகள் கேட்கும். அதுவே போதுமானது. நான் வாழவேண்டு மென்ற ஆசை எனக்கில்லை. நீ என்னைக் காதலிக்க வில்லை—எனக்கேன் இந்த வாழ்வு! கொன்றுவிடு. என் அன்பே ரொதோல்போ இப்பொழுது நீ எனக்காகச் செய்யப்போவது—செய்யக் கூடியது அது ஒன்றேதான் அல்லவா—ஆம் நடக்கட்டும் கொன்று விடு.

ரொதோல் : தீஸ்ப்....செய்த தவறையெல்லாம் நீயே ஒத்துக்கொள்...

தீஸ்ப் : நான் சொல்கிறேன் கேள்...இன்னும் ஒரேஒரு வினாடி கேள். என்னுடைய வாழ்வே அப்படித்தான். இது வெறும் வார்த்தை அலங்காரமல்ல. உடைந்த இதயத்தின் குமுறல். எங்களைப்பற்றி எல்லாம் மற்றவர்களுக்கு இரக்கம் இருக்காது. எங்களிடத்திலே கடமையும், தைரியமும் அன்பும் இருக்குமென்பதை நம்பமாட்டார்கள். நான் இன்னும் வாழத்தான் விரும்புவதாக நினைக்கிறாயா? நினைத்துப்பார். நான் சிறுமியாக இருக்கும்போது பிச்சை எடுத்து வயிறு வளர்த்தேன்—பதினாறு வயது வரையில் எனக்கு உணவுண்டா? உடைஉண்டா? கண்டகண்ட செல்வர்களுக்கு விளையாட்டுப் பொருளாக இருந்து, இவனிடத்தில் சிலநாள், அவனிடத்தில் சிலநாள்— இதுதானே என் வாழ்க்கை. ஆனால் இன்றே கலா ராணி கண்கவரும் ஓவியம்—குயில் மயில் இன்னும் என்னென்னவோ சொல்கின்றனர். செல்வமும் அழகும் இருப்பதால் எத்தனை கோமான்கள்

என்னைக் குளிர்பூஞ் சோலையென நினைக்கிறார்கள். அங்கு ஏன் போகிறாய்? இந்தச் சர்வாதிகாரிகூட என் காலடியில் அல்லவா! பட்டினி கிடந்துகிடந்து செத்த எனக்குத்தானா சாவ பயம்; இல்லை ரொதோல்போ இல்லை—நான் என் வாழ்விலே இன்பம் கண்டதே கிடையாது. சிறுவயதிலிருந்து இன்றுள்ள செல்வப் பெருக்கில்கூட எனக்குத் துளிகூட மகிழ்ச்சி ஏற்பட்ட தில்லை. என்னசெய்வது? என் வாழ்க்கை, நான் கொடுத்து வைத்தது அவ்வளவுதான். பெரிய இடத்துப் பெண்களாக இருந்தால் அவர்களுக்கு இரக்கம் காட்டுவார்கள். அவர்கள் அழுதால் ஆறுதல் கூறுவார்கள். கெடுதல் செய்தால் மன்னிப்பார்கள். எங்களுக்கு யாவும் நல்லதுதான். துன்பம் தருவார்கள். இன்பமாகப் பேசி ஏய்ப்பார்கள். நாங்கள் யாரிடத் திலே போய் முறையிடுவது? முறையிட்டால் கேட்பவ ருண்டா? துன்பப்பட பிறந்து விட்டபோது துன்பப் பட்டுத்தானே ஆகவேண்டும். மற்றவர்கள் உண்டால் பசி நீங்குமா? மற்றவர்கள் இன்பமடைய ஆடுகிறோம் பாடுகிறோம். அதனால் நாங்கள் இன்பமடைய முடியுமா? ரொதோல்போ—நீயே சிந்தித்துப்பார். என் நிலைமைக்கு என்னைக் காதலிக்கிற ஒரு இதயம் எனக்குத் தேவையல்லவா? காதல் இல்லையென்றால் என் வாழ்வு எப்படியாவது? உன் உள்ளத்தைக் கவர வேண்டும் என்பதற்காக நான் இப்படிக் கூறுவதாய் நினைக்காதே. இனி அதனால் என்ன பயன்? இனி ஒன்றும் நடக்கப் போவதில்லை. என் சாவுக்குப் பிறகு எந்த அளவில் தீஸ்ப் நம்மைக் காதலித்தாள் என்பது நீ உணர்வாய். இந்த ஆறு மாதங்களாய் உன் பார்வையே எனக்கு உணவு உன் முறுவலே எனக்கு இன்பம். உன் மூச்சே என் உயிர் - அப்படித்தான் அவை இருந்தன. இந்த ஆறு மாதங்களாய் என்னைப் பற்றி ஒரு வினாடிகூட நினைத்ததில்லை என் உயிராகிய நீ—எப்பொழுது

என்னை இறுக அணைத்து தீஸ்ப் நான் உன்னைக் காதலிக்கிறேன் என்று சொல்லுவாயோ என்றுதான் ஏங்கிக் கிடந்தேன். ஏதேதோ நினைத்துச் சங்கடப் பட்டேன். எப்படி உன் மனதை , மாற்றுவதென்று எண்ணாதனவெல்லாம் எண்ணினேன்—அது உன்மேல் தவறில்லை. நீ என்னசெய்வாய்? உன் எண்ணம் ஏழாண்டுகளுக்கு முன்பு கத்தேரினாவினால் சிறை செய்யப்பட்டதென்பதை இப்பொழுதுதான் உணர்ந் தேன். இதற்காக நான் உன்னை வெறுக்கவில்லை. உன் துன்பம் நிறைந்த உன் வாழ்விற்கு ஏதோ விளையாட்டாகக் காலப்போக்காக நான் இருந்தேன் என்பதை இப்பொழுதுதான் உணர்ந்தேன். அதற் காகக் கவலைபடவில்லை உன்னை நிந்திக்கவும் இல்லை. நான் என்ன செய்வது. நீ இன்றேல் இனி என்னால் வாழமுடியாது - உன்னால் தான் நான் உயிர்க்கிறேன். நடமாடுகிறேன், பேசுகிறேன் - பாடு கிறேன் - ஆடுகிறேன் - இதோ பார்த்தாயா, நான் சொல்வதைக் கூட கேட்கமாட்டேன் என்கிறாயே என் பேச்சு அவ்வளவு வெறுப்பாகவா இருக்கிறது இந்த நிலையில் வேறு ஒரு மரமூஞ்சு பார்த்தாலும்கூட என்மீது மனமிரங்குமே. அவ்வளவு பாவியா நான்.

ரொதோல் : நான் நிச்சயமாகச் சொல்லுகிறேன். அதில் எனக்குச் சிறிதுகூட ஐயமில்லை. வாளெடுத்துவர சர்வாதிகாரி ஓடினபோது நீ - என் கண்ணை - என் காதலியை நஞ்சருந்தச் சொல்லிக் கட்டாயப்படுத்த வில்லையா? நான் இனி எதையும் கேட்க முடியாது. கத்தேரினா எங்கே? கொன்று விட்டீர்களா? அல்லது நஞ்சு கொடுத்தீர்களா? எங்கே அவள் ஊம் எங்கே? விரைவாகச் சொல். என் வாழ்வின் உயிர்நாடி அவள். அவளேதான் வேறு இந்த உலகத்தில் எவரும் இல்லை.

தீஸ்ப் : அவள்! அவளேதான்! வேறு யாருமில்லையா? ஐய்யோ என்னால் இந்தச் சொற்களைக் கேட்க முடியவில்லை. இந்தக் குத்துவாளால் என்னைக் கொன்றுவிடேன். ஏன் இப்படி எல்லாம் சொல்லிச் சொல்லிக் கொல்கிறாய். (அவன் வைத்திருக்கிற குத்துவாளைக் காட்டி) இதால் தீர்த்துவிடேன்.

ரொதோல் : எங்கே அவள்? என் உயிர் - என் உடல்- என் காதல்...எங்கே அவள்?

தீஸ்ப் : உனக்குச் சிறிதுகூட மனம் இளகவில்லை, ஈவு இரக்க மற்றவன் நீ!. என் இதயத்தைப் பிளக்கிறாய். சரி—நான் சொல்வதைக் கேள். உனக்குத்தப்ன் சொன்னதெல்லாம் உண்மைதான், ஆம் நான் அவளுக்கு நஞ்சு கொடுத்துத்தான் கொன்றேன். என் காதலுக்கு - என் வாழ்வுக்குத் தடைக்கல்லாக இருந்த அவளைக் கொன்றுவிட்டேன்.

ரொதோல் : நீயா இப்படிச் சொல்கிறாய். கடவுளே! கொன்றதுமல்லாமல் அதைப் பெருமையாகக்கூடச் சொல்லுகிறாயா?

தீஸ்ப் : ஆம் நான்தான் செய்தேன், என் காதல் வழிக்குக் குறுக்கே நின்ற கற்சுவரை இடித்துத் தூளாக்கினேன் - நீ கொல், ஊம் கொல்.

ரொதோல் : வஞ்சகி.

(குத்துவாளால் குத்துகிறான்.)

தீஸ்ப் : (கீழே விழுகிறாள்) ஆ...இதயத்தில்—இதயத்தில் குத்தினாய்...மகிழ்ச்சி! நல்ல வேலை செய்தாய். அன்பே ரொதோல்போ—உன் கைகள்—உன்கை. (அந்தக் கையைப் பிடித்து முத்தமிட்டு). நன்றி- என்னை இப்பொழுதுதான் காப்பாற்றினாய். விடு உன் கையை என்னிடம் விடு. நான் உனக்கொரு கெடு தலும் செய்யமாட்டேன். என் அன்பு—ஆசை-உயிர் உடல்மூச்சு யாவும் நீயல்லவா. என் வாழ்நாளில் இன்று தான் நான் இன்பம் காண்கிறேன். போகட்டும். நான் இனிப் பிழைக்கமாட்டேன்.

நான் காதலிக்கிறேன் என்று இப்பொழுதாவது ஒரு வார்த்தை சொல்.

ரொதோல் : தீஸ்ப்

தீஸ்ப் : ஒரே ஒரு வார்த்தை சொல்......சொல்ல மாட்டாயா?

(திரைக்குப் பின் கட்டிலுக்குள்ளே ஒரு குரல் கேட்கிறது.)

கத்தேரினா : நான் எங்கே இருக்கிறேன் ரொதோல்போ?

ரொதோல் : என்ன அது? யார் குரல்?
(திரும்பிப் பார்க்கிறான் - கட்டிலின் திரையை விலக்கிக் கொண்டு கத்தேரினா பார்க்கிறாள்.)

கத்தேரினா : ரொதோல்போ!

ரொதோல் : (அவள் அருகில் ஓடுகிறான்-அவளைத் தன் இருகைகளாலும் வாரித் தூக்குகிறான்)
கத்தேரினா! கடவுளே! நீயா. உயிரோடா? இது எப்படி? என்ன? (தீஸ்பின் பக்கம் திரும்பி)
ஆ—என்ன செய்து விட்டேன் தெரியுமா?

தீஸ்ப் : (இழுத்துக்கொண்டே புன்புறுவல் பூத்து அவள் அருகில் வருகிறாள்.) ஒன்றுமில்லை. நீ ஒன்றும் செய்யவில்லை. நான்தான் யாவும் செய்தேன். நான் இறந்து விடவேண்டுமென்று நினைத்தேன். உன்னை அந்த அளவுக்குத் தூண்டினேன்.

ரொதோல் : கத்தேரினா - நீ பிழைத்துக்கொண்டாய்! கடவுளே நீ யாரால் காப்பாற்றப்பட்டாய்?

தீஸ்ப் : என்னால் - உனக்காக

ரொதோல் : தீஸ்ப்! ஓடி வாருங்கள்! ஓடி வாருங்கள்! மடையன் நான்!

தீஸ்ப் ; வேண்டாம். எந்த உதவியும் பயனற்றது நான் பிழைக்கமாட்டேன். நீ மகிழ்ச்சியாய் இருந்தால் போதும். உன் இன்பத்திற்காகத்தானே இப்படிச்

செய்தேன். சர்வாதிகாரியை ஏமாற்றி நஞ்சுக்குப் பதில் மயக்கமருந்தை கொடுத்தேன். அவள் இறந்து விட்டதாக யாவரும் நம்பினார்கள். அவள் இறக்க வில்லை. தூங்கிக் கொண்டிருந்தாள். அதோ குதிரைகள் தயாராக இருக்கின்றன. இதோ ஆண் உடை அவளுக்காகப் புறப்படுங்கள். மூன்றுமணி நேரத்திற்குள் எல்லையைத் தாண்டிவிடலாம். வேனீஸ் எல்லையைக் கடந்துவிடலாம். அங்கே இவர்கள் ஒன்றும் செய்ய முடியாது. சர்வாதிகாரிக்கு இவள் செத்துவிட்டாள்; உனக்கு உயிரோடிருக் கிறாள்; எப்படி என் திட்டம்? சிறந்ததுதானே?

ரொதோல் : கத்தேரினா!.... தீஸ்ப்....

(மேல்மூச்சு இழுத்துக் கொண்டிருக்கிற தீஸ்பின் அருகில் மண்டியிடுகிறான்.)

தீஸ்ப் : (மங்கிய குரலால்.) நான் சாகப்போகிறேன். எப்பொழுதாவது என்னைப் பற்றி நினைப்பாய் பாவம். தீஸ்ப் எவ்வளவு நல்லவள் தெரியுமா? எனக்காக எத்தகைய செயல் செய்தாள்? என்பாய். ஆம், அதுவே போதும் எனக்கு; அந்தச் சொற்கள் என் கல்லறையில் என்னை மகிழ்விக்கும், நான் பிரிகிறேன். இந்த உலகத்தை விட்டுப் பிரிகிறேன் - என் அன்பை - உயிரை - காதலை விட்டுப் பிரிகிறேன். என் ரொதோல்போ - கத்தேரினா என் ரொதோல்போ என்பதற்காக என்னை மன்னி யுங்கள். என் ரொதோல்போவை விட்டுப் பிரிகிறேன் ரொதோல்போ! ரொதோல்போ! உடனே புறப் படுங்கள். கிளம்புங்கள்.— நிற்கக் கூடாது. சிறிது நேரம் கூட இனி இங்கே இருக்கக்கூடாது. நான் சாகிறேன். நீங்கள் வாழுங்கள். ஆம் நீங்கள் வாழ்வதில்தான் எனக்கு இன்பம். நான் உங்களை வாழ்த்துகிறேன்.

சாகிறாள்

## இந்த நாடகம்...

உயிரினும் மேலானது காதல் என்பது இந்த நாடகத்தின் கருவாக (Theme) விளங்குகிறது. சர்வாதிகாரி (ஆன்ஜெலோ), நடனப் பெண் (தீஸ்ப்), பாடகன் (ரோதோல்போ) எனும் இம் மூவரின் காதல் வாழ்வில் ஏற்படும் சிக்கல்களை இந்நாடகம் விவரிக்கிறது. சர்வாதிகாரி நடனப் பெண்ணை விரும்புகிறான். நடனப் பெண்ணோ பாடகனை விரும்புகிறாள். ஆனால் பாடகனோ அரசியை விரும்புகிறான். சர்வாதிகாரி, நடனப் பெண் இருவரின் காதலும் நிறைவேறாமல் போகின்றது. பாடகனும் அரசியும் (இளவயதுக் காதலர்கள்) கருத்தொருமித்த காதலர்களாக இருந்தபோதும் சமுதாயம் அவர்களை இணைய விடாமல் தடுக்கிறது. இறுதியில் இந்தக் காதலர்கள் நடனப் பெண்ணின் உதவியால்—உயிர்த் தியாகத்தால் கோட்டையிலிருந்து தப்பித்து நாட்டை விட்டு வெளியேறுகின்றனர்.

SRI GOMATHI GRAPHIC
Madras-5 Phone: 844554